# சுயோதனன்

## (துரியோதனன்)

ஓர் ஆராய்ச்சி நூல்.



இந்து சமயச் சொற்பொழிவாளரும்,

ஆல்வாய்மொழி;

கவண்மென்று நடுத்தரப பாடசாலைத்

தலைமையாசிரியருமாகிய

**ஆர். பத்மநாபபிள்ளை**

இயற்றியது.

1940

 [விலை அணா 10.

# முகவுரை.

---

பாரதப் பெருங்கதையை அறியாதார் பாரத நாட்டில் எவருமில்லை. ஆயினும், பாரதப்போர் விளைத்த துரியோதனன் ஆதியோர் துர்க்குணமே உருவெடுத்தாற் போன்றவரென்பது பொதுமக்கள் கருத்தாகும். மக்களாய்ப் பிறந்தாருள் குற்றமே அற்றாரைக் காண்டல் அரிது. குற்றமும் குணமும் மாந்தர் தன்மையில் கலந்திருத்தலாலேயே,

"குணம் நாடிக் குற்றமும்நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்" என்று திருவள்ளுவர்

பணித்தார். எப்பொருள் எத்தன்மைத்தாயினும், அப்பொருளின் மெய்ப்பொருளை ஆராய்ந்து தெளிதலே அறிவுடைமையாகும். இவ்வுண்மையைத் தழுவி எழுதப் பட்டது "சுயோதனன்" என்னும் இவ்வாராய்ச்சிநூல்.

"புயத்துறை வலியரேனும், பொறையொடும் பொருந்தி வாழ்தல் சயத்துறை" என்னும் விழுமிய கொள்கையை விடாது கடைப்பிடித்தொழுகும் தருமன் வாழ்க்கை மாந்தர் மனத்தைக் கவர்வதாகும். "அரவுயர்த்தோன் கொடுமையினும், முரசுயர்த்தோய் உன தருளுக்கஞ்சினேனே" என்று வீமன் வாயிலாக வில்லி கூறும் வாசகம், உருக்கமும் உண்மையும் வாய்ந்ததாகும். தருமன்பாலமைந்த பொறுமையாதிய குணங்கள் எங்ஙனம் போற்றுதற்குரியனவோ, அங்ஙனமே சுயோதனனது வீரமும், மானமும் அறிந்து வியக்கத்தக்கனவாம்.

பாரதம் போன்ற காவியங்களைக் கற்கும் மாணவர், காய்தல் உவத்தல் அகற்றி உண்மையே நாடுதல் வேண்டுமென்று இந்நூல் வற்புறுத்துகின்றது.

கன்னித்தமிழொடு கவின் மலையாளமும் கற்று இருமொழிப்புலமை வாய்ந்துள்ள திருவாளர் பத்மனாபபிள்ளை அவர்கள் மாணவரும் படித்து மகிழத்தக்க எளிய இனிய நடையில் இந்நூலை எழுதியுள்ளார். ஆராய்ச்சியே அறிவுடைமைக்கழகென்று கருதும் தற்காலத் தமிழுலகம் இந்நூலை ஆதரித்து ஏற்குமென்பதில் ஐயமில்லை.

சென்னை,
23-4-1940.

ரா. பி. சேதுப்பிள்ளை, B. A., B. L.,
Reader in Tamil, University of Madras,
&
Ex-Lecturer in Tamil, Annamalai University

சிவ மயம்.

VYSIAL STREET,
COIMBATORE 2—4—1940.

"சுயோதனன் அல்லது சுத்த வீரன்" என்ற நூலை அதன் ஆசிரியரும் எனது நண்பருமாகிய திரு. ஆர். பத்மநாப பிள்ளை அன்புடன் எனது பார்வைக்கு அனுப்பினார்கள். அதனைப் படித்துப் பார்த்தேன். அது நல்ல எளிய தமிழ் நடையில் சிறுவர்க்கும் விளங்கும்படி எழுதப்பட்டுள்ளது. "காய்தல் உவத்தல் அகற்றி யொரு பொருட்கண், ஆய்தல் அறிவுடையார்க் கண்ணதே—காய்வதன்கண், உற்றகுணம் தோன்றாதாகும் உவப்பதன்கண், குற்றமும் தோன்றாக் கெடும்" என்பது நீதி நூல் ஆதலின் அதனைப் பின்பற்றி இந்நூல் மாபெரும் இதிகாசமாகிய மாபாரதத்தினுள் ஒரு புறத்துத் தலைவனாகிய துரியோதனனைப் பற்றி உண்மைச் சரித ஆராய்ச்சி முறையில் நன்கு ஆய்ந்து எழுதப்பட்டுள்ளது. துரியோதனன் கொடியரிற் கொடியவன்; கடையவரிற் கடையவன் என்பதுதான் பொது எண்ணம். ஆனால், உலகத்தில் நன்மையும் தீமையும் கலந்தே நிற்பது வெளிப்படை. ஆதலின், துரியோதனனிடத்தும் பல நல்ல குணங்களைக் காணலாகும் என்பதனை இந்நூல் விளக்கி ஆராய்ச்சியினுள் நல்ல முறையில் தூண்டுகின்றது. இது பள்ளிக்கூடங்களிற் பாட புத்தகமாக வைக்கப்படத்தக்க நூல். இதனைப் பயிலும் மாணவர்கள் ஆராய்ச்சித் துறையிலும் தமிழ் நடையிலும் சரிதக் கல்வி ஒழுங்கிலும் நல்ல

பயன் அடைவார்கள். இதன் ஆசிரியர்க்கு எல்லா நலன்களும் எய்துவனவாக.

இங்ஙனம் அன்புள்ள,

**C. K. Subramania Mudaliar, B. A.,**

Vakil Ex-Member of

The Senate University of Madras,

&

Ex-Member of Coimbatore District

Temple Committee.

---

CHIDAMBARANAGAR,
NAGERCOIL,
10TH APRIL 1940.

**Mr. R. Padmanabha Pillai,** Lecturer on Hindu Religious subjects and Headmaster, Government Tamil Middle School, Aramboly, has brought out a Tamil book, "**Duryodhana**", being a sympathetic study of a famous epic character appearing in the "Mahabharata". The author tries his best to redeem Duryodhana from the utter depravity to which the great Vyasa's estimate has consigned him. I am glad that this literary study is written in simple prose without any of the stereo-typed mannerisms and pedantic phrase-mongering which disfigure many recent works in Tamil Prose. The author deserves well of the Tamil reading public and has my hearty congratulations.

**K. N. Sivaraja Pillai,** B.A.,
Retired Reader in Tamil, University of Madras,
&
Member of the Advisory Board in Tamil,
Travancore University.

# மதிப்புரை.



ஆலவாய்மொழி அரசாங்கக் கலாசாலைத் தலைமையாசிரியரும், சிறப்புவாய்ந்த சைவசமயப் பிரசாரகரும், சென்னை சைவசித்தாந்த மகாசமாஜத்தினரும், தமிழ்ப்புலவருமாகிய திருவாளர் ரா. பத்மநாப பிள்ளையவர்கள் இயற்றிய **'சுயோதனன்'** என்ற ஆராய்ச்சிநூல் எனது பார்வைக்கு வந்தது. துரியோதனனை அளவுகடந்து இகழ்ந்து, அவனுடைய நற்குணங்களை அறவே மறந்து, அவனை ஒரு அரக்கனாக எண்ணும் இந்நாளில், அவனைப்பற்றிக் காய்தல் உவத்தலின்றி நடுநிலைமையில் நின்று அவனுடைய குணங்களையும் செயல்களையும் ஆராய்ந்து உண்மைகளை அஞ்சாது இந்நூல் எடுத்துக்கூறுவது எனக்குப் பெரிதும் மகிழ்ச்சியைத் தருகிறது. துரியோதனனுடைய ஒப்பற்ற பெருமையை விளக்குவதற்குக் கிருட்டினன் தூதுச் சருக்கத்துள்

"மடந்தை பொற்றிரு மேகலை மணியுகவே மாசறத்திகழும் ஏகாந்த
இடந்தனிற் புரிந்தே நான் அயர்ந்திருபப எடுக்கவோ கோக்கவோ என்றான்
திடம்படுத்திடு வேலிராச ராசனுக்குச் செருமுனைச்சென்று செஞ்சோற்றுக்
கடன்கழிப்பதுவே எனக்கினிப் புகழுங்கருமமும் தருமமும் என்றான்"

என்று கர்ணன் கூறுவது அரிய சான்றாகத் திகழ்கின்றது. இத்தகைய சந்தர்ப்பத்தில் "எடுக்கவோ கோக்கவோ" என்னாது "குத்துவேன் வெட்டுவேன்" என்று வாளோச்சி நண்பர்களைக் கொலைபுரிந்த பதடர் சரிதைகள் எண்ணிறந்தனவுள்ளன. பொறுமை கடலினும் பெரிது

என்ற முதுமொழிக்குத் துரியோதனன் ஓரிலக்காக விளங்கியதை இச்சரிதம் கூறுகின்றது. இதைப்போன்ற பல அரிய பொருள்களைத் திருக்குறள், வில்லிபுத்தூரார் பாரதம் முதலிய நூல்களிலிருந்து பலமேற் கோள்காட்டிப் பள்ளிக்கூடத்து மாணவர்களும் நன்முக உணரக்கூடிய எளிய நடையில் இந்நூல் விளக்குகின்றது. இது பாடசாலைகளில் பாடபுத்தகமாக வைத்தற்குரிய நூல். சமயபோதனை செய்வதில், நேர்முகமாகத் தத்துவபாடங்களைப் புகட்டுவதைவிட இத்தகைய நூல்கள் மூலமாகப் பலசமய நீதிகளைப் பயில்விப்பது நன்முறையாகும். இந்நூல் தமிழினைஞர்கட்குப் பயன் தருமாறு கீதாசாரியன் கிருபைபுரிக.

இங்ஙனம்,

ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி. எ. பி. எல்.

Ex-M. L. C.,

காரியதரிசி, சைவசித்தாந்த மகா சமாஜம்,

10—4—1940. சென்னை.

# முன்னுரை



"ஆக்குமா றயனுமுத லாக்கிய வுலகங
காக்குமாறு செங்கண்ணிறை கருணைடங் கடலாம்
வீக்குமீறானுமவை வீந்தநாள் மீளப்—
பூக்குமா முதலெ வனவன் பொன்னடிபோற்றி".

சிலவாண்டுகளுக்கு முன் நாகர்கோயில் தமிழ் உயர்தரப்பாடசாலையில் தமிழாசிரியராயிருந்த பொழுது பல பாரத நூற்களையும் படிக்க நேர்ந்தது. அதனைப் பற்றிய சில வாராய்ச்சிகள் குறிக்கலானேன். அது பொழுது மலையாளத்திற் சீரிய பனுவலாய் இலங்கும் சுயோதனன் என்னும் நூலையும் வாசித்தேன். அது என் மனதிற்கு மகிழ்ச்சியை யளித்ததால் அதனைத் தழுவித்தமிழில் ஓர் நூலெழுத என்னுள்ளம் எழுந்தது. அந்நூலாசிரியர் எம். இராஜராஜவர்ம கோயில்தம்பிரான் M. A. B. L. (பென்ஷன் தேவஸ்தான கம்மீஷணர்) அவர்கட்கு எழுதியதில் பன்மொழிப் பண்டிதரான தம்பிரானவர்கள் மகிழ்ச்சியோடனுமதியளித்தனர். அவர்கட்கு எந்நன்றி உரித்தாகுக. அதன் பல பகுதிகளைத் தழுவியும், வேறு சில புனைந்தும், மேற்கோள்கள் நிறுவியும் பாடசாலை மாணவர்கட்கு ஏற்றவாறு எழுதியுள்ளேன்.

துரியோதனனைப் புகழவேண்டிய விடங்களிற் புகழ்ந்தும், இகழற்குரிய விடங்களில் இகழ்ந்தும், வீமன்

முதலியோரின் குணகுற்றங்களைக் காட்டியும் இந்நூல் எழுதப்பட்டிருக்கின்றது. இதனால் காத்தற் கடவுள் கண்ணபிரானையும், அறக்கடவுள் தருமன் முதலியோ ரையும் பழிக்குமியல்பினனென்று எண்ணற்க. அவர் களிடம் பக்தியுடையவன்.

இதனைச்சுருங்கிய நாளில் மிக்கதிறமையோடும் அன்போடும் அச்சூர்ந்து வேண்டுவன உதவிய நாகர் கோயில் தென்னிந்திய அச்சுக்கூடத்தலைவர் உழுவலன்பர் திரு. ஸி. இராமநாதபிள்ளையவர்கட்கு எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்திக்கொள்கிறேன்.

ஆரல்வாய்மொழி,
14—7—1115.

ஆர். பத்மநாபபிள்ளை.

# உள்ளுறை.

---

உ

ஓம்

# சுயோதனன்

அல்லது

# சுத்த வீரன்

---

## முதலதிகாரம்.

---

"குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்"

அண்மையிற் காலஞ் சென்ற பெரியாரைப் பற்றியே உண்மைக்கு மாறுபட்ட கூற்றுகள் புறப்படு வனவாயிருந்தால் சரித்திரகாலத்திற்கு எவ்வளவோ முற் பட்ட புராணத் தலைவர்களைப்பற்றியும் முரணின கொள் கைகள் வெளிப்படுத்தலின் வியப்பென்ன? வாலியை வதைத்த முறையில் இராமபிரானையே பழிக்கின்றனர். மகானாகிய அலக்ஸாண்டர் தன் தந்தையைக் கொன்ற னெனச் சிலர் கூறுவர். ரோமன் தேசத்தாருடைய புகழை நிலைநாட்டிய ஜூலியஸ் ஸீஸர் ஈனாபிமானியாம். பறங்கி தேசத்தின் பெருமையை விளங்கச்செய்த சார்லி மெயின் மதப்பைத்தியமுடையவரே. உலகமெங்கும் நடுங்கச்செய்து ஜர்மன் மகாநாட்டைப் பெரிதாக்கிய பிர டரிக் என்பவன் கண்ணோட்டமில்லாக் கன்னெஞ்சன் என்பர். கழிந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஐரோப்

மாக்கண்டம் முழுதும் நடுங்கச்செய்த வீரனும் நெப்போலியன் போனப்பார்ட்டு மூட நம்பிக்கை உடையவனும். நம் பரதகண்டத்தை நல்வழிப்படுத்திப் புதிய ஆட்சி முறைக்கு முதல்வனுயிருந்த அக்பர் சக்கிரவர்த்தி குற்றமற்றவராயிருந்தனரோ? தமிழுலகம் எங்கணும் புகழை நாட்டிய கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் கடைசிக் காலத்தில் சோழன் மகனிடம் காட்டிய கடுஞ்செய்கையை கற்றறிந்தோர் பொறுப்பார்களோ? ஆகவே, எந்தவொரு பெரியாரது சரிதத்தை ஆராய்ந்தாலும் குற்றம் காண்டல் எளிதேயாம். இதனாலன்றோ நம் தெய்வப்புலவரும்

"அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு"

எனத் திருவாய் மலர்ந்தருளினர்.

புராணத்தலைவனுகிய துரியோதனனைப்பற்றி நம் பாரதமக்கள் யாவரும் வெறுப்புடையராகவே இருக்கின்றனர். தாய்ப்பாலை யருந்தும்பொழுதே நாம் துரியோதனன்மாட்டுப் பகைமையை உட்கொள்கின்றோம். நம் மனதில் வேரூன்றிய இப்பகை மாபாரதம் பயின்ற பின்னரும் நிலைநிற்கின்றது. அழுக்காறென்னும் தீக்குணத்திற்கு உறைவிடமான ஓர் மாணவனாகவும், தான் தோன்றியான ஓர் இளவரசனாகவும், கொடுமைசெய்வதில் பேராவாவுடைய ஒரு காளையாகவும், வஞ்சனைக் கஞ்சா நெஞ்சினனாகவும், சினமும் செருக்குமுற்றுக் குலங்கொல்லும் மூடனை கொடியோனாகவும் துரியோதனனைப் பலவாறாக இழித்துக்கூறினால் தலைகுலுக்காத இந்தியர் ஒருவரேனும் உளரோ? மகாபாரதத்தின் ஒவ்வொரு சருக்கத்தையும் உற்றுநோக்குங்கால் இதற்குத்

தக்க சான்றுகள் புலப்படும். ஆனால், சுற்றத்தார் பகைமைபற்றி இயற்றிய செய்கைகளைமட்டும் விலக்கினால் துரியோதனனது சரிதத்தைப் பற்றி வியாசபகவான் கூறுவதென்ன? அவ்வண்ணலுக்கு அரசர்க்குரிய அருங்குணங்களுள் யாதேனும் குறையுளதோ? கௌரவர்கள் யானையேற்றம், குதிரையேற்றம், வில்வித்தை, வாள்வித்தை ஆகிய படைக்கலப்பயிற்சி, அருங்கலைவிநோதம், கலைபயில்தெளிவு, கட்டுரைவன்மை முதலிய ஆற்றல்கள் அமைந்தவர்களென்றே ஆன்றோரும் நவின்றனர். "அஞ்சாமை ஈகை அறிவூக்க மிந்நான்கும் - எஞ்சாமை வேந்தற் கியல்பு", "தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும் - நீங்கா நிலனாள் பவற்கு" என்னும் வேத விதிப்படியான நற்குண நற்செய்கைகளில் துரியோதனன் ஒரு சிறிதும் குறைந்தவனல்லன். சிற்றன்னை, பேரன்னை மக்களும், சிறிய தந்தை, பெரிய தந்தை மக்களும் தம்மில் பகையுடையவராயிருத்தல் இக்காலத்தில் மட்டுமன்று; பண்டைக்காலத்திலும் உண்டென்பதற்கு குருபாண்டவ சரிதமே போதிய சான்றாகும். "ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்றது உலகெங்கும் கண்டோமே", "ஒரே மனதில் வெவ்வேறான இயற்கை தோன்றுவது முண்டே". இவ்வண்ணமானால் தாயத்தாரிடத்தில் துரியோதனன் பகைத்தமை அத்துணை அதிசயமன்று. தாயபாகம் பற்றிய வழக்குகள் இம்மண்ணுலகில் எண்ணிறந்தன. இவ்வழக்கிற்குக் காரணமாயிருந்தோர் அனைவரையும் நாம் வெறுப்பதில்லையே; அவர்களது ஏனைய நற்குணங்களைப்பாராட்டுகிறோமன்றோ? ஆதலின், துரியோதனனைப்பற்றி மட்டும் அவ்வளவு

வெறுப்புக்கொள்ளுதல் நியாயமாகாது. ஆண்மை உடைய ஓர் ஆடவனுக்குச்சுற்றந்தழாமை குறையேயாயினும் உலக இயற்கையான இத்தீக்குணம் நீக்கினால் துரியோதனன், பேன்மக்களுள் ஒருவனும், அரசியன் முறையைத்திறம்பட அறிந்தவனும், விரைவில் மகிழ்வோனும், விருந்தோம்புதலில் அருந்திறமுடையோனும், கலியா மனமுடையோனும், நட்பினருக்குப் பெரும் நட்பாளனும், மாற்றாருக்குப் பெரும் ●ற்றலனுமாய் இருந்தனன் என்பதற்கையம் சிறிது மில்லை. வன்மை, ஊக்கம், அஞ்சாநெஞ்சம், வீரம் முதலிய நற்குணங்களை விரும்புவோர் துரியோதனனை ஒருபோதும் மறக்கவேமாட்டார்கள். இராமபிரானுக்கு இராவணன் பெரும் குற்ற முடையோனாய்த்தோற்றுவன் எனினும், அவனது நற்குணங்களை நாம் போற்றுதல் வேண்டும். திப்புசுல்தான் கையில் வாளேந்தி இந்துக்களை மகமதியரோடு உணவருந்தச்செய்வித்தும், ஆலயங்களை அழிக்கச்சொல்லியும் அழகிய நாடுகளை பாழாக்கியும் இருந்தனன். ஆயினும், ஆங்கிலேயர் ஸ்ரீரங்கப் பட்டினத்தை முற்றுகையிட்டபொழுது அங்கு வசித்த இந்து சமயிகள் இன்புற்றிருக்கக்கண்டனர். அவ்வாறு பாண்டவருக்குத்துரியோதனன் உடன் பிறந்த நோயாகவோ அல்லது மானிட வேடம் பூண்ட கொடியஅரக்கனாகவோ தோற்றப்பட்டானாயினும் நடுநிலை பிறழாது சரித்திரவாராய்ச்சி செய்வோனுக்கு அவனது அருங்குணங்களும் தென்படாமலிரா.

பாண்டவர் மிக நல்லவராயிருந்தனர்; துரியோத ஞதியர் கொடியராகவே காணப்பட்டார்கள் என்பதை ஒப்புக்கொண்டு சரித்திர நுணுக்கம் உணர்வோன் அடங்கி விடமாட்டான். பற்பல கதைகளின் தலைவர்களைப்பற்றிய குணகுற்றங்களை நாடுவது மட்டுமல்ல அவன் வேலை. ஒவ்வொரு பெரியாருடையவும் செய்கை எவ்வாறிருப்பி னும் அதனுல் எய்தும் பயனைக்கூறி நன்மை தீமைகளை வெளியிடலும், தற்காலம் எழும் ஐயப்பாடுகளை அகற்றி அதனுல் விளையும் நலனை உணர்தலும், மாறுபாடாய்த் தோன்றும் காரியத்தின் உண்மைப்பொருளையறிதலும், சரித்திர ஆராய்ச்சி செய்வோன் கடமையாதலால் அவன் இரக்கமற்ற பாவியாகவோ, ஈனமதியுடையவனுகவோ ஆகான். சரிதம் எழுதுவோன் ஒருதலைப் பற்றியவனுய் நடுநிலை தவறி ஒருசாரார் செய்வன முற்றும் சரியென் றும் மறுசாரார் செய்வன முழுதும் தப்பென்றும், மேன்மையானவற்றைக் கீழ்மையாகவும், சிறியவற்றைப் பெரியவையாகவும் சொல்வதால் பண்டைக்கால உண்மை கள் மாறுபட்டுப்போகின்றன.

இறைவனுல் படைக்கப்பட்ட இயற்கைப் பொரு ளின் இயல்பை அறிந்த இயற்கை நூல் வல்லுநர் புதிய புதிய கருவிகளையும், உபாயங்களையும் கண்டுபிடித்த செயலை நாம் மனமார வாழ்த்தி வியக்கின்றோம். அவ் வண்ணமே மக்களின் இயற்கையைப்பற்றி பொறுமையு டன் ஆராய்ச்சி செய்து சரித்திரத்தின் ஒவ்வொரு பகு தியிலும் விளங்கச்செய்யும் தோற்றத்தினருமையை அறி வோர் மிகச் சிலர்தாமுளர். பண்டைக்காலத்து மக்களது சிந்தையும், செய்கையும் இத்தன்மையனவென்றுணர்வது எளிதல்ல. அப்பொழுது வழங்கிய நீதிநெறிக்கும், தற்காலத்து வழங்கும் நியாயமுறைக்கும் பெரும்

வேற்றுமை உளது. அங்ஙனமிருக்க, புராணத்தலைவர்களது உண்மைக் கருத்தைப்பற்றி வெளியிடுதல் ஆழ்ந்து ஆராய்வோர்க்கே இயலும். எத்தனையோ ஆண்டுகளுக்கு முற்பட்ட அவர்களுக்கு ஒருங்கால் தோன்றிய உள்ளக் கிளர்ச்சியின் தன்மையை அறிவதே சரித்திர ஆசிரியனது முதற்கடமையாகும். கதை நிகழுங் காலத்தில் காண்பவர்களைவிட பின்னர் அதனை சரித்திரவாயிலாக ஆராய்ச்சி செய்வோருக்கு நுட்பங்களை அறிந்து கொள்ளுதல் மிகஎளிது. இடிமுழக்கமும், மின்னொளியும், மழையின் தூற்றலும், காற்றின் சீற்றமும் உள்ள மலை அடிவாரத்தின் நிலைமை அக்குன்றின் உச்சியினின்று காண்போருக்கு, ஓவியத்தழகு ஒருமிக்கத் தெரிவதே போல் செவ்வையாய்ப் புலப்படும். வெட்டல், குத்தல், சுடுதல், தாக்குதல் ஆகிய செயல்கள் நிகழும் போர்க்களத்தின்கண் எவர் மாளுகின்றனரென்றும், எவர் வெற்றி பெறுவரென்றும் அப்போர்வீரர் அறியார். துப்பாக்கிக் குண்டு பாயமுடியாத தூரத்தில் ஆகாய விமானத்தினின்றும் தொலை நோக்குஆடி வழியாய் உற்றுநோக்கும் படைத்தலைவன் வெற்றியை நன்குய் அறிவான். மாறுபாடு அடைந்துகொண்டிருக்கிற இயற்கை வனப்புகளை புகைப்படக்கருவியால் அசைவற்ற சித்திரங்களாக்கி எடுப்பதுபோல் அவ்வப்பொழுது நடைபெறும் நிகழ்ச்சிகளைச் சரித்திரம் உறுதியாய் வெளிப்படுத்தா நிற்கும். குருபாண்டவர் காலத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளின் அழியாப்படம் ஒன்றை வேதவியாசமுனிவர் மகாபாரதக் காப்பியமாக தந்தருளினர். அப்படத்தின் ஒவ்வொரு பகுதியையும் நுட்பமாய் உணரவல்ல ஆற்றலுடையோர் துரியோதன மன்னனது மனப்பான்மையை நன்கு விளக்குவாராக. அங்ஙனம் முழுதுமுணராது 'ஆடு ஒரு

செடியிலே தன் வயிறு நிரம்பும்படி தழை நிறைந்திருப்பினும் அதனை வயிறு நிரம்ப மேயாமற் சிறிது கடித்தமாத்திரத்திலே விட்டு விட்டுப் பல செடிகளிலும் சென்று சிறிது சிறிது மேயப்புகும் இயல்பாய் சில பாகங்களை மட்டிலும் படித்து விட்டு நூலைப்பற்றி ஒரு தலையான கருத்து வெளியிடல் பேதையர் இலக்கணமன்றோ? ஆகவே, மேற்கூறியவற்றான் விளங்கும் உண்மை ஒன்றுளது. என்னை எனில் இப்பேருலகில் தற்காலத்தில் காணும் பெருமைக்கும் வன்மைக்கும் முதற் காரணமாயிருந்த சான்றோர்கள் எத்துணைத் தீமையையும் கொடுமையையும் உடையவராய் இருந்தபோதிலும் யாவராலும் ஏற்றுக் கோடற்குரியரேயாவர். இத்தகைய மாண்புடையோர் இல்லாதிருப்பின் உலகநிலைமை அடியோடு மாறிவிடுமென்பது திண்ணமே. ஆதலால், அன்னார் புகழுடம்பு நீடூழிகாலம் இந்நிலவுலகில் நிலை நின்றோங்கும் என்பதற்கையமில்லை. இத்தகைய பெருமக்களுள் ஒருவனே நம் சுயோதனன்.

---

# இரண்டாம் அதிகாரம்.



## இளமைப் பருவமும் கல்விப் பயிற்சியும்

துரியோதனனது காலம் எது என்று வரையறுத்துக் கூறவியலாது. ஆயினும், மாபாரதம் நடந்தது கலியுகத்தின் முற்பகுதியிலென்று வியாசர் கூறுகின்றார். அதனால், அவன் பிறப்பு இற்றைக்குச் சுமார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் என்றே துணியவேண்டும்.

அவன்மரபு:- சந்திரகுலத்தில் நகுஷன், யயாதி, பூரு, துஷியந்தன், பரதன், ஹஸ்தி, குரு முதலிய பல அரசர் தோன்றினர். அம்மரபில் உதித்தவனும், இப்பரத கண்டத்தில் ஹஸ்திநுபுரியில் அரசுபுரிந்தவனுமாகிய சந்தனுவிற்கு மனைவியர் இருவர். முதல் மனைவியாகிய கங்கையின் வயிற்றில் வீடுமனும், இரண்டாம் மனைவியாகிய யோசனகந்திக்கு விசித்திரவீரியனும் தோன்றினர். முன்பு சந்தனுவுக்கும், யோசனகந்திக்கும் பிறந்த சித்திராங்கன் ஓர் கந்தருவனால் கொல்லப்பட்டான். முன்னைய உறுதிமொழிப்படி பீஷ்மன் விசித்திரவீரியனுக்கு முடிசூட்டலாயினன். பின்னர் விசித்திரவீரியன் மக்கட்பேறின்றி கடிய நோயாலிறக்க அவன்தாயாகிய சத்தியவதி மனம் உழன்று வியாசமுனிவனை வரவழைத்து வணங்கவே, அவனது மனைவியருள் அம்பிகையிடத்துத் திருதராஷ்டிரனும், அம்பாலிகையிடத்துப் பாண்டுவும், தாதிப்பெண்ணினிடத்து நீதிமானாகிய விதுரனும் வியாசனருளால் பிறந்தனர்.

திருதராஷ்டிரன் பிறவிக் குருடனுதலால் பாண்டு விதுரனை அமைச்சனுக்கித் திருதராஷ்டிரனுக்கு முடி சூட்டி, தான் அரசியலை நடாத்தினுன். பாண்டுவுக்கு மனைவியோடு சேரலாகாதென்னும் சாபம் நேரிட்டதால் அவன் அனுமதிப்படி அவனது முதல் மனைவியாகிய குந்தி தனக்கு இளமையில் துருவாசமுனிவன் உபதேசித்த மந்திரத்தின் மாட்சியால் வந்த மறலியால் தருமபுத்திரனையும், வாயுதேவனுல் வீமனையும், தேவேந்திரனுல் அருச்சுனனையும் பெற்றனள். (முன்பு சூரியனருளால் கன்னிப் பருவத்தில் கன்னனையும் ஈன்றனள்.) குந்தியின் மாற்ருளாகிய மாத்திரி அவளால் அம்மந்திரம் உபதேசிக்கப்பெற்று அசுவினிதேவர்களால் நகுலன், சகாதேவன் என்னும் இரட்டைப் புதல்வர்களையும் பெற்றனள். திருதராட்டிரனுக்குத் துரியோதனன், துச்சாதனன் முதலிய நூறு புதல்வர்களும், துச்சளை யெனுமோர் புதல்வியும் காந்தாரியினிடம் பிறந்தனர். பாண்டவரைவருள் தருமபுத்திரன் துரியோதனனுதியர் நூற்றுவரினும் மூத்தவன் என்றும், வீமன் முதலிய நால்வரும் துரியோதனனுக்கு இளையவரென்றுமறிக.

துரியோதனன் பிறந்தபொழுது இரைந்த குரலுடன் அழுததை வருணித்த ஒருசார்புடைய கவி, குழந்தையின் அக்குரல் கேட்டவுடன் அருகிலிருந்த காகங்களும், கழுதைகளும், கழுகுகளும் எதிரொலியிட்டன என்று கூறுவது மிகவுங் கடுமையே.

"வாரியினதிர்ந்து விம்முமங்கல முழவமேன்மே
லோரியின் குரலா லோதையொடுங்கின விடங்கள்தோறும்
பாரிய குலத்தோா கண்ணினுவகைநீர் பனிக்கு முன்னே
சோரி யந்தரத்தினின்றுஞ் சொரிந்தது சோனமேகம்."

என அப்பொழுதிருந்த உற்பாதங்களை வில்லிப்புத்தூரா ரும் கூறியிருக்கவில்லை. இங்ஙனம் எழுதியது, பின்னர் காணப்பெற்ற மனப்பான்மையின் அடிப்படை என்றே கூறவேண்டும். இவ்வாசிளங்குமாரனைப்பெற்றது வெட்டை வெளியான அம்பலத்திலா? ஓர் அழகிய அரண்மனையி லன்றோ? அன்றியும், பெண்கள் இருக்கும் அந்தப்புரம் எவ்வளவு மறைவான இடமாகும். அதனுள்ளே குழந்தை யழுத ஒலியைக்கேட்டு மேற்குறித்தவைகளெல்லாம கத்தினவென்றமையாற் கவி தன்மைநவிற்சியுடையர் அல்லரென்றும், வெறும் புனைந்துரைப் பிரியர் என்றும் துணியவேண்டுமே யொழிய வேறில்லை. மதலைகள் முத லில் இரைந்து கத்துவது யாண்டுமியல்பே. இம்மட்டோ? வருங்காலம் அறிந்துரைக்கும் நிமித்திகர் பலர் தருமன் குலாதிபதியாவான்; இக்குழந்தை குருகுலமும், நாடும் அழியச்செய்வான் எனவும் கூறினர். சோதிடர் "எவ் விதத்திலேனும் உன்குல நன்மையைக் கருதி இம்மதலை யைக் கொன்றுவிடுக"வென்று திருதராட்டிரனுக்குத்தெரி வித்ததோடு நில்லாது 'ஓர் குலத்தின் நன்மைக்காக ஒரு வனை இழந்துவிடலாம்; ஒரு சிற்றூருக்காக ஒரு குலத்தை அழித்துவிடலாம்; ஒருநாட்டின் வாழ்வின்பொருட்டு நூறு குடிகளுள்ள ஒரு சிற்றூரை இல்லாமற்செய்துவிடலாம்; எனப்பல நீதிமொழிகளையுங்கூறி வாதாடினர். மக்களா வலுடைய அம்மன்னன் இதற்குச் சற்றும் செவிகொடுக்க வில்லை. முற்காலங்களில் கிரேக் தேசத்தைச் சார்ந்த ஸ்பார்ட் நகரத்தார் பலமற்றதும், நோயுற்றதுமாகிய குழந்தையை மலைமீது எறிந்துவிடுவது போல் திருத ராட்டிரனும் நிமித்திகரது சொல்லை நம்பி தன் மூத்த மகனைக் கொலை செய்திருப்பின் எத்துணைக் கொடிய பாதகமாகும். மாந்திரிகனும், நிமித்திகனும் இயற்கைக்கு மாறாக எதிர்த்து நின்றாலும் ஊழின் வலியை வெல்ல

வியலாது. இது பற்றியே "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று-சூழினும் தான்முந் துறும்" எனப் பெரியாரும பணித்தனர். மிக்க ஊக்கத்துடன் மலையினின்றும் எழும் நீர்ப்பெருக்கை இருகைகளானும் தடுத்தல் சாலுமோ? எல்லையற்ற மக்களது மும்முரமான தாக்குதலை முளை கட்டித் தடுத்தல் இயலாதே.

பாண்டு உயிர் துறந்த பின் பெண்மணியான குந்தியை யும், சிறுவர்களாகிய மக்களையும் முனிவர் அஸ்தின புரத்திற்கு அழைத்து வந்து பெரிய தந்தைபால் ஒப்பு வித்தனர். பாண்டவர்களைக் கண்டபொழுது கௌரவர் களும் மிகக்களிப்படைந்தனர்.

> "முகுரவானனனும் வேத்துமுனிவனும் மனஞ் சொற்காயம்
> பகிர்விலா விதுரன்தானும் பாந்தளேறுயாத்தகோவும்
> நிகரிலாத் துணைவாதாமும் நீரொடுநீர் சேர்ந்தென்னத்
> தகைவிலா வன்பினோடுந்தழுவினர் கெழுமினோரே."

என்றமையால் முதலில் இருதிறத்தாரும் பகையில்லாது அன்புடையராய்க் காணப்பட்டனர். இங்ஙனம் பாண்ட வர்களுங் கௌரவர்களும் மதலை விளையாட்டாம் இன்பத்தையனுபவித்து வந்தனர். ஓடுதல், சாடுதல், இடித்தல், பிடித்தல் முதலிய ஆடல்களிலெல்லாம் பீமனே தலைவனானான். துரியோதனாதியர்க்கு ஒன்றி லும் வெற்றி கிடைக்கவில்லை. பீமன் அவர்களுக்குத் துன்பங்கள் பல விளைத்தனன். கௌரவர் நூற்றுவரையும் பீமன் தனியாகப் பிடித்துக் கொள்வான். சிறுவர் பதின் மரைநீரில் அமிழ்த்திவைப்பதும் விடுவதும், ஊக்கமாய்க் கௌரவரனைவரையுமொருங்கே பிடித்திழுத்து அவர்தம் கை கால்கள் தரையில் இழையும்படி பிடித்துத்தள்ளு வதுந்தான் அவன் வேலைகளாயிருந்தன. மரத்தின் மீது காய்கனிகள் பறிக்க இளைஞர் ஏறினால் முரடனான பீமன் விரைவாக மரத்தில் தாவிக் கிளைகளை மிதித்துக் கொண்டு

ஆடத்தலைப்படுவான். உடனே கனிகள் உதிர்வனபோல் உயிர் நடுங்கி, அச்சிறுவர் பூமியில் தொம்மென வீழ்ந்து துன்புறுவர். இளைஞர் விளையாட்டாகப் பாண்டவரை யடித்தால் இத்தடியன் பதில் மீட்டுவது மிக்க அதிசயமே. அவர்களது பற்கள் போனாலும் போகும், மூக்கற்றாலும் அற்றுவிடும். இவர்கள் முன்னிலையில் சிற்றுண்டியாதேனும் வைத்தால், இப்பெருவயிற்றன் ஓரே நடையிலனைத்தையும் விழுங்கிவிடுவான். கௌரவர் ஒன்றும் பெறாது திகைத்து நிற்பர். இவ்வாறு எப்பொழுதுந் துன்புறுத்திய பீமனிடத்தில் சிறுவனாந் துரியோதனனுக்கும் அவன் தம்பியர்க்கும் பகை முளைத்ததைப்பற்றி வியப்படைவோர் பாலர் மனநிலைமை யறியாதவரே. இதனால் பீமனைக் குற்றமுடையானென்று எண்ணற்க. அவனிடம் அரிய நற்குணங்கள் பலவுள. வீமன் காந்தாரி மைந்தரிடங் காட்டிய கடுஞ்செயல்கள் பகைமையாலன்று: இளமைப் பருவத்தின் இயற்கையென்றும், தந்தையில்லா மக்கள் தவறிழைப்பினும் பொறுத்தருள்வது பெரியார் கடமையென்றும் அறிவுடையோர் கூறுவர். இத்தகைய பல நன்னீதிகளையுமுன்னி, யதன்படி-ஒழுகுதல் சிறுவருக்குத் தற்போது இயலாது. சிறுவர் எஞ்ஞான்றும் சிறுவரே. அவர்களுக்கு உடனுடன் நிகழ்வனவற்றையல்லாது, ஆனவற்றையும், மேல்ஆவனவற்றையும் ஆழ்ந்து ஆய்ந்து செய்யவல்ல ஆற்றல் இன்று. அன்றியுந்தன் தந்தை பெருவேந்தனாயிருக்கத் தன் அரண்மனையில் வந்து தங்குந் தஞ்சுற்றத்தார் இத்துணைத்தீங்கியற்றல் தகுமோ? எனத் தோற்றுதல் யாவர்க்குமியற்கையே. ஆதலால், பாண்டவருள் பீமனது கொடிய செய்கைகளைக் கண்ணுற்ற துரியோதனன் எவ்வாற்றானுஞ் சூழ்ச்சிசெய்து கொலைபுரிய வேண்டுமென்றுன்னியது தகுதியே. அதுமுதல் தீங்கிழைக்கவும் முயன்றனன். துரியோதனனுக்குப்

பீமனிடத்தில் முளைத்தசெற்றம் ஏனைய பாண்டு மைந்தரி லும் பரவிற்று. பாண்டவர்களைப் பாழாக்கிவிடவேண்டு மென்று துரியோதனன் எண்ணக்காரணம், பாண்டவர் செய்த ஆற்றொணாத்துயரமேயாகும். பீமத்தடியனை நசுக்காது வைத்திருப்பின் தன்னையுந் தன் தம்பியரையும் அறவே யொறுத்து விடுவானெனத் துரியோதனன் உணர்ந்தனன். நேரிற் சென்றெதிர்க்க இயலாவிடின் தந்திரத்தால் வஞ்சிக்க எண்ணுதல் உலகவியல்பு. அரச குமாரர்கள் நீர்விளையாடப் பூஞ்சோலை புக்கபோது,

"பின்னரு மொருபகற் பெற்றம் பெற்றவன்
தன்னையும் மகீபதி தனயனுதரித்
தின்னமு தருத்துவான் போல யாவையும்
துன்னிய விடங்களாற் றுய்ப்பித்தானரோ."

"விடத்திலே யழிந்தறி வொழிந்த வீமனை
வடத்திலே பிணித்தனன் கங்கை வாரியின்
இடத்திலே யமிழ்த்தினன் இதயமொத்தவர்
திடத்திலே முதிர்ந்த சிங்கரா திறங்களால்."

இவ்வண்ணம் பீமனுக்கு நஞ்சுகலந்த உணவைக்கொடுத்தும் கயிற்றால் கட்டி நீரிலமிழ்த்தவுஞ் செய்தனர். வஞ்ச னையைத்தவிர வீரனும் பீமனிடந் துரியோதனனுக்கு வேறென் செய்ய வியலும். பிள்ளைகள் தங்களுக்குள் நிகழ்த்திய இப்போராட்டத்தைத்தடுக்கப் பெரியோ ரான பெற்றோர்கள் இருசாராரையும் கண்டிப்பாய்த் தண்டித்து, சகோதரநேசத்தினருமையைப் பற்றியுப தேசித்திருந்தால் இங்ஙனம் நிகழ இடமில்லை.

தொட்டிலிற் பழக்கஞ் சுடுகாடு மட்டும் என்னும் முதுமொழிக் கிணங்க இளமையில் முளைக்கும் விருப்பும் வெறுப்பும் உயிர்துறக்கு மளவும் நிலைத்து விடுமென்பதை திருதராட்டிரனாவது பாட்டனாகிய வீடுமனாவது எண்ணி

ஞர்களில்லை. பொய்யொன்று புனைந்துவிட்டால் அதனை நிலை நாட்டப் பல பொய்கள் புகல வேண்டுவதாகிவிடும் பீமனை யாற்றிலமிழ்த்திய பின் இல்லத்திற் கேகிதன் சிற்றன்னையான குந்திபாற்சென்று பீமன்சற்றுமுன்னமே வந்தனனெனப் பொய்யுரைத்தனர். இச்சூழ்ச்சியை யறிந்தபொழுது அதற்கு வேண்டுவனவற்றைச் செய்யாது மறைத்து வைத்த நீதிமானாகிய தருமன் செயலைப் புகழ்ந்து கூறும் வியாசர் கூற்று உலகுக்கொவ்வுமோ? தாமாகவே முதன் முதல் வழக்காட வேண்டாமென் றெண்ணியத் தருமன் வாளாவிருந்தனன். நாடோறும் வளரும் உட்பகை முடிவில் பெருங் கேட்டை விளைவிக்கு மென்றெண்ணாதது என்னோ? “உறன்முறையான் உட்பகை தோன்றின் இறன்முறையான்—ஏதம் பலவுந் தரும்” என்னுமருமைத் திருவாக்கின் கருத்துமறியாது போயினனோ?

கௌரவர் தம் விருப்பத்திற்கேற்பப் பயனடைய வில்லையாயினும் பாண்டவர்களிவையனைத்தையும் வெளி யிடாததால் அடிக்கடி துன்பஞ் செய்யத் துரியோதன னுக்கு ஊக்கம் பிறந்தது. இருவர் தமக்குட் பகை நேரின் அதனையொன்றுக்குப்பத்தாக மூட்டும் நாரதர் எத்தனை பேர்? புராணங்களிற் கூறப்பெறும் நாரதன் ஒருவனே. இம்மண்ணுலகிலோ நாரதர் பலர். துரியோதனனுக்குத் தன்சுற்றத்தாரிடம் பகையுண்டென்றறிந்ததும், கர்ணன் சகுனி முதலியோர் காற்றுடன் நெருப்புச்சேர்ந்தாற் போல், கோட்சொல்ல அவனோடு சேர்ந்தனர். இவர் தம் ‘கோட்சொல்’ பகையென்னும் பயிருக்கு நல்ல வளனாயிருந்தது. “கோட்செவிக்குறளைக் காற்றுடன் நெருப்பு” என்ற மூதாட்டி மொழியையும் நோக்குக.

பதினைந்து வயது வரையிலும் விளையாடியும் போராடியும் நாட்களைக்கழித்த சகோதரர்கள் கல்லா மூடராயிருந்தனரோ வென்றையுறவேண்டாம். தகுந்த இலக்கிய விலக்கணப் பயிற்சியும், மறைபயில் தெளிவுமுடையராய் விளங்கினர். சாத்திரப்பயிற்சி முடிந்தபின் அரசகுமரர்க்கின்றியமையாத வில்வித்தை கற்பிக்கும் பொருட்டு, வில்லாளியான கிருபன் ஆசிரியனாயமைக்கப் பெற்றான்.

"கோதமன் மகன் மகன் குனிவிலாதியா
மேதக் படைக்கலம் யாவும் வீறுடம்
மாதவன் வயிற்பயில் வரதன் வன்றிறற்
கேதமில் சிந்தையான் கிருபனென்றுளான்."

இத்துடன் நில்லாது துரோணாசாரியனையும் வரவழைத்து அரசிளங் குமாருக்குத் தனுர்வேதம் பயிற்றுவித்தனர்.

"பரிவுடனிவன் படை பயிற்றப்பின்னரும்
குருபதி வேறொரு குருவைத் தேடினன்
இருளற மதிநில வெறித்ததாயினும்
பரிதியை நயக்குமிப் பரவை ஞாலமே."

இங்ஙனம் சந்திரசூரியரையொத்த இரு பேராசிரியரிடத்தும் மாணவர் "வெற்றிகொள் சிலையும் வெவ்வேலும் வாளமும் பற்றலர் வெருவரும்படி பயின்றனர்." என்பது போல் யுத்தமுறைகளைச் செவ்வனே கற்று வருகையில், எல்லோரினும் மிக்கவல்லமை அர்ச்சுனனுக்கே காணப்பட்டமையால் துரோணாசாரியன் நுட்பமான படைக்கல முறைகளை அவனுக்கே கற்பித்தனன். பாண்டு மைந்தரிலொருவனிடத்து ஆசிரியன் பேரன்பு காட்டினமையால் சுயமரியாதையுடைய துரியோதனனுக்கு முன்னிருந்த பகை வேரூன்றக் காரணமாயிற்று.

யோதன முறைத்தத்துவங்களுக்கு மாறாக நடுநிலை பிறழ்ந்து கல்வி கற்பித்த இவ்வாசிரியனது செயலை ஒட்டியோ வெட்டியோ பலருங் கூறுவர்.

# மூன்றாம் அதிகாரம்.

---

## நாட்டின் உரிமை.

**வி**ல் வித்தை முடிந்தவுடன் கற்றதிறமையை வெளிப்படுத்தும் பொருட்டு ஓர் காட்சி ஏற்படுத்தப் பட்டது. அதனைக்கண்ணுற வீடுமன், துரோணன், கிருபன், திருதராட்டிரன், அறைப்பெண்கள் முதலியோர் அரங்கின்கண் குழுமினர். அக்காலத்தில் இவ்வித காட்சிகளிற்றான் ஒவ்வொருவரும் தத்தம் திறமையைக்காட்டுவர். முதன் முதல் பாண்டவர், தாம் கற்ற யுத்த முறைமையைக் காட்டத் தலைப்பட்டனர். கண்டோர் அனைவரும் வியப்புறவே மகாரதர் எனும பட்டமும் பெற்றனர். இதனையே வில்லிப்புத்தூராரும் வருமாறு கூறலாயினர்.

"ஆற்றின் வழுவா மனுமுறைத்தருமன் மைந்தன் முதலாகிய குமாரரடைவே
போற்றியடலாசிரியர் இருவரையும் அன்பினுயர் பூசைபலசெய்து புரிநா
ணேற்றிய சராசனம் வணக்கிவடி வாளியினி லக்கமவை நாலுவகையான்
மாற்றினர் பிளந்து பெருவண்மைசிறு நுண்மை சலநிச்சலமெனச்சொல்வகையே"

பின்னர் துரியோதனனும் வீமனும் தண்டேந்தி மற்போர் செய்தனர். சபையாருட் சிலர் பீமன் வெல்ல வேண்டுமென்றும், சிலர் துரியோதனன் வெற்றிபெற வேண்டுமென்றும் வாதாடவே, அவையோர் இரு பிரிவாய்ப் பிளவுபட்டனர்.

"ஒத்தவலியோர்வலியும் ஒத்த திறலோர் திறலும்
ஒத்தவினையோர் வினையும் வன்
சித்தமனன்மூள முகவம்புயமலர்ந்தரசன்மகனும்
அனிலன் சிறுவனும
கைத்தலமமர்ந்த கதைகொண்டெதிர் நடந்தனர்
களிப்புடன் இரண்டு தறுகண்
மத்தகயம் வேரொடு மராமரம் எடுத்தமர் மலைந்தனைய
கோல மறவோர்."

இவ்வாறு கொடும்போர் விளையலாகாதென்றெண்ணி துரோணாசாரியன் அவர்களைமாற்றி விட்டு அர்ச்சுனனை முன்னேறச்செய்தனன். வீரனும் பார்த்தன் அனற்படை, வாயுப்படை, வருணப்படை முதலிய அம்புகளை, பூமியிலும் ஆகாயத்திலும் தாவி, நேரிலும் மறைந்தும் எய்துகாண்பித்தனன். கண்டார் அனைவரும் 'வில்லுக்கு விசையன்', எனப்புகழ்ந்து கொண்டாடினர். அப்பொழுது, "ஏ! அர்ச்சுனா! உன்திறனுக்கு உயர்வாய் யான் வில்வித்தை புரிகிறேன்; நோக்குவாய்! நீ கர்வம் கொள்ள வேண்டாம்" எனக் கடுஞ்சினத்தோடுரைத்துக் கர்னன் களத்திலிறங்கினன். உடன் துரியோதனனுக்குதித்த உவகைக்கு எல்லையில்லை.

"மருவி நின்றருக்கன் மைந்தன் வானநாடன் மகனை நா
மிருவரும் தருக்கொள் போரியற்ற வம்மினென்றலும்
குருகுலந்தழைக்கவந்த குமரனன்பு கூறவே
உருகி நன்றெனத்தழீஇ யுகந்துளந் தருக்கினன்."

என்ற பாரதச்செய்யுளானுமறிக. அர்ச்சுனன் காட்டிய அனைத்தையும் கன்னனும் செய்து காட்ட பற்குனன் வெட்கமுற்று மனம் மாழ்கினன். நடுக்கடலுள் நீர் குடித்து உயிர்துறக்கும் நிலையிலிருக்கும் ஒருவனுக்குத் திடீரென்று ஓர் மணற்குன்று தென் பட்டால் எய்தும் களிப்பிற்கு எல்லையுமுண்டோ? அத்தன்மைபோல் தன்னால்

வெல்ல முடியாத அர்ச்சுனனோடு எதிர்க்கக் கர்ணன் தலைப்பட்ட காலத்து அவனைத் தழுவிக்கொண்டு "யானும் இக்குருநாடும் இன்று முதல் உன்னிஷ்டப் படியே" எனத் துரியோதனன்* கூறியது வியப்பன்று. அன்று முதற் கொண்டு கர்ணார்ச்சுனர் பகைவரானார்கள்.

"அனந்தரம் பொரற்கு நீ கொலந்தர மெனக்கெனாத்
தனஞ்சயன் செயிர்த்தல் கண்டுதபனன் மைந்தன் மீளவும்,
முனைந்த போரின் முடிதுணித்துன் முகரோருகத்தினாற்,
சினந்தணிந்த ரங்கபூசை செய்வனென்று சீறினான்".

என்றவானோர் கூற்றுக்கிலக்காகி யிருந்த சீற்றத்தோடு கர்ணார்ச்சுனர் மற்போர் தொடுக்கத் தலைப்பட்டனர். துரியோதனாதியர் கர்ணனுக்குத் துணையாய் நின்றார்கள். பீஷ்மன், துரோணன் முதலியோர் அர்ச்சுனன் பாகத்திற் சார்ந்தனர். வரபலமுடைய கர்ணனை அர்ச்சுனனால் வெல்லவியலாதென்றெண்ணிக் கிருபாசாரியன் ஓர்சூழ்ச்சி செய்தனன். என்னை எனில்' மல்யுத்தஞ் செய்வோர்தங்கள் குலம் இன்னதெனக்கூறிய பின்னரே போர் செய்ய வேண்டுமென்ற நியதியிருத்தலால் "நீவிர் இருவிரும் நும் மரபினைக்கூறுவீர்" என்றனன். தன்தாய் தந்தையர் யாவர் என்றறியாக் கர்ணன் நாணித் தலை குனியவே துரியோதனன், ஓ! ஆசிரியத்தலைவா!

* "கற்றவர்க்கும் நலனிறைந்த கன்னியர்க்கும் வண்மைகை
யுற்றவர்க்கும் வீரரென்றுயர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
கொற்றவர்க்கும் உண்மையான சோதின் ஞானசரிதரா
நற்றவர்க்கும் ஒன்றுசாதி நன்மை தீமையில்லையால்"

"அரிபிறந்த தன்றுதூணி லரனும்வேயி லாயினான்
பரவையுண்ட முனியுமிப் பரத்துவாசன் மைந்தனும்
ஒருவயின்கண் முன்பிறந்த தொண்சரத்தினல்லவோ
வரியவென்றி முருகவேளு மடிகளும் பிறந்ததே".

என்று பல நீதிமொழிகளையும் எடுத்து இயம்பினன். பார்த்தன் 'மன்னவரிடத்திலன்றிப் போர் புரியே'னென்றால் 'இப்பொழுதே கன்னனை அங்கநாட்டிற்கு அரசனாக்கி விடுவேன்' என்றுரைத்து அவ்வாறே மகுடமும் புனைந்தான். இதைக் கவிவருமாறு கூறுகின்றார்.

* "என்றநல்ல வுரையெடுத் தியமபியேனை யிழிவினோ
டொன்றிநின்ற ஆடகததை யோடவைக்கு மாறுபோல்
அனைறுகுந்தன் மதலைதன்னை அங்கராச னாக்கினன்
மின்றயங்கு முடிகவித்து வேந்தெலாம் வியக்கவே."

இதனால் துரியோதனனது கல்வியறிவும், சொல்வன்மையும், ஈகைக்குணமும், நன்குப்புலப்படுகின்றன. சுயோதனனது இச்செய்கை எவ்வளவு மேன்மையும், கர்ணனுக்கு எத்துணையுதவியும் ஆயிற்றென்று கூறவேண்டுவதில்லை. † "காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்—ஞாலத்தின் மாணப் பெரிது" என்று தமிழ்வேதம் கூற, பெரியநன்றி புரிந்த துரியோதனன்மாட்டுக் கர்ணன் என்றும் மறவா நன்றியும் நட்புமுடையவனாயிருந்தானென்பது பின் கர்ணன் கண்ணனிடம் கூறுமாற்றான் இனிது விளங்கும்.

"ஆரென்றறியத்தகாத வெனையரசுமாக்கி முடி சூட்டிச்,
சீருந்திறமுந்தனது பெருந்திருவுமெனக்கேதெரிந்தளித்தான்
பாரின்றறிய நூற்றுவர்க்கும்பழிதீர்வென்றிப்பாண்டவர்க்கும்
போரென்றறிந்தும் செய்நன்றி போற்றாதவரிற்போவேனோ?

பாண்டவரோடு எதிர்க்கத் தகுதியான ஓர் நண்பன் கிடைத்ததில் துரியோதனன் அளவற்ற மகிழ்ச்சியடைந்தான்.

கல்விப்பயிற்சி முடிந்தவுடன் ஆசிரியர்க்கு என்ன வழிபாடு செய்வோம் என்றெண்ணினர். அப்பொழுது துரோணாசாரியர், தன்னொடு ஒரு சாலை மாணாக்கனை

பாஞ்சாலன் தனக்கு அரசாட்சி வந்தபொழுது முன்னி யதிப்படி ஆண்டுசென்ற தன்னை ஆதரியாததினால் அவனை வென்று கட்டிக்கொண்டுவர வேண்டுமென்றனர். இதனைக் கேட்ட துரியோதனனாதியர் "யாம் முன்னே! யாம் முன்னே!" என விரைவாய்ப் புறப்பட்டனர். போர் வீரனாகிய துருபதனை வெல்ல முடியாது கவலையுடன் திரும்பிவிட்டனர். குருவின் அனுமதியோடு பீமார்ச்சுனர் போருக்குச்சென்று அவனை முறுகக்கட்டி, ஆசிரியர் முன் கொணர்ந்தனர். பாண்டவர்கள் கௌரவர்களை விட வல்லமை காட்டியதால் துரியோதனனுக்கு முன்னிருந்த பொறாமை மிகுந்தது. கர்ணனது உதவியிருந்தும் போதா தென்று துரியோதனன் அப்பொழுது தான் அறிந்தான்.

பாண்டு வுயிர்துறந்தகாலையில் அரசாங்கம் முறைப்படி தருமனுக்கே கிடைக்க வேண்டும். ஆனால், தருமபுத்திரன் இளமைப் பருவத்தினனாயிருந்தாலும், குந்தியும் மைந்தரும் அஸ்தினாபுரியை அடைந்தமையாலும், பிறவிக்குருடனாகிய திருதராட்டிரன் அரசாண்டு வந்தனன். நாட்டின் நிலைமை சீர்கேடாயிருந்தது. தருமன் காளைப்பருவ மடைந்து கல்விப்பயிற்சி பெற்றபின் திருதராட்டிரன் முடி சூட்டாது அவனை இளவரசாக்கினான். இங்ஙனம் செய்த நியாயம் விளங்கவில்லை. விசித்திர வீரியனுக்குப்பின்னர் அரசாள வேண்டுவது திருதராட்டிரனே. அவன் பிறவிக் குருடனானது பற்றி இளையோனாகிய பாண்டுவிற்கு முடி சூட்டினர்? ஒருமுறை நழுவிப்போன அரசாங்கம் முன் னாண்டவரசனது மக்கள் உயிருடனிருக்குங்கால் திரும்பக் கிடைப்பதற்குத் தருமநூல் இடங்கொடாது. அரசாட்சிக் குரியோன் தற்போது இளமையாயிருந்தனன் என்ற ஒரு விஷயமே உணரத்தக்கது. எப்பொழுது அவனுக்கு அரசாளத்தகுந்த வல்லமை வந்ததோ அப்பொழுதே

அவன்பால் நாட்டை ஒப்புவித்துவிடவேண்டும். அங்ஙனஞ் செய்யாது திருதராட்டிரன் நாடாளத் தொடங்கியது குற்றமென்றே அறிஞர் கூறுவர். ஆயினும், தருமன் பெரிய தந்தையின் அன்பிற்காக தன்னுரிமையைக் கேட்க வில்லை. இளவரசனாகவிருந்து தன் தந்தையினும் பன்மடங்கு சிறப்பாக நாட்டை ஆண்டுவந்தனன். பீமன் முதலியோர் மிகுந்த உதவிபுரிந்தனர். அர்ச்சுனன் பத்துத்திசைகளை யும் வென்று புகழை நிலைநாட்டினன். பண்டைக்காலத்து அரசியன் முறை தற்கால அரசியன் முறைக்குச் சற்றுத் தாழ்ந்ததல்ல. அப்பொழுது மன்னர்கள் குடிகள் நிலை மையை நேரிற்சென்று வினவியும், ஒற்றர்களையனுப்பி அறிந்தும் வந்தனர். இப்பொழுதோ அமைச்சராலும் அதிகாரிகளாலும் ஜனப்பிரதிநிதிகளாலும் நாட்டின் நிலை மையை அறிகின்றனர். "படைகுடி கூழமைச்சு நட்பர ணாறுமுடையான் அரசருள் ஏறு" என்றபடி செங்கோல் மன்னர்கள் தம் அங்கங்களனைத்தையும் சரிவர நிறுவிச் செங்கோன் முறையிற் சிறிதும் பிறழாமல் ஆனபயம் ஐந்துந்தீர்த்துக் குடிகளைப் பாதுகாத்து வந்தனர். இக் காலத்துப்பல இலாகாக்களும், அமைச்சர்களும் இருப்பன போல் அரசியலை நடத்த அக்காலத்தும் ஐம் பெருங் குழுவும், எண்பேராயமும் இருந்தன.

† "குடிதழீஇ கோலோச்சு மாநிலமன்னன்
அடிதழீஇ நிற்குமுலகு"

என்றபடி தருமன் சிறப்பாய்ச் செங்கோல் செலுத்தவே குடிகள் அனைவரும் மன்னவன் உயிர்போலாயினர். இதனையறிந்த திருதராட்டிரன் களிப்படையாமல் கசப்ப டைந்தான். ஒருவர்க்குயர்வுவரின் அதனைத் தாழ்த்த

அனுப்பவேண்டுமென்றுன்னிய தந்தையின் அன்பு அந்தோ! எத்துணைச்சிறப்புடைத்து? கழுகிலிட்டுக் கொலை செய்யப் படுவோனுக்குப் பால் முதலியன கொடுப்பன போல் அந்தணர் முதலிய அறவோர்க்களித்தலும், பல்லோர்க் குணவளித்தலும் ஆயுங்கால் மிக்கவியப்பாகத் தோற்று கின்றன.

மூத்த அறிவும், ஆற்றலும், உயர்பதவியும் உடைய திருதராட்டிர மன்னவன் இங்ஙனம் தீங்கிழைத்ததை நோக்குங்கால் சிறுவனும் சுயோதனன் அரக்குமாளிகை யில் அடைத்து எரிமூட்டியது அவ்வளவு அதிசயமன்று. சில வாண்டுகளுக்குமுன் ஆங்கிலவீரர்களை கல்கத்தாவில் ஓர் இருட்டறையில் அடைத்துக் கொலைபுரிந்ததால் சுராஜ தௌலா என்னும் கொடுங்கோன் மன்னனுக்கு எய்திய தீங்கிற்கெல்லையும் உளதோ? அவ்வாறே, குருகுலம் முடி வதற்கு இத்தகைய கொடிய வினைகள் ஏதுவாயிருந்தன. அரக்கில்லிற் பாண்டவர் எரிந்து விட்டனர் எனஎண்ணிய தந்தையும் மகாரும் வெளியில் அனுதாபம் காட்டினர். தீரசூரர்களான பகைவர் வஞ்சனைக்குள்ளானார்களென்று மகன் களிப்படைந்தான். அம்மகிழ்ச்சி நெடுநாள் நிலை நிற்கவில்லை. பாஞ்சாலி சுயம் வரத்தில் பார்ப்பன வேடம் பூண்டு சென்று ஏனைய அரசர்களால் அசைக்கமுடியாத வில்லைத்தூக்கி அம்பைப்பூட்டி குறிப்பாய் எய்தது பார்த்தன் என்பதும், அவனுக்குத் துணையாயிருந்தது பீமன் முதலியோர் என்பதும், ஐவரும் துருபதநாட்டில் மிக்க மேன்மையாய் வாழ்கின்றனர் என்பதும் ஒற்றர் களால் தெற்றென வுணர்ந்தபொழுது துரியோதனன் அடைந்த வெட்கத்திற்கும் துக்கத்திற்கும் அளவேயில்லை. அஞ்சா நெஞ்சமும், ஆண்மையும் உடைய அக்குமரன் இதிலும் கலங்கவில்லை. வஞ்சனையால் வெல்ல முடியாதி

பகைவரை நேரிற் சென்றெதிர்ப்பதே தகுதி யென்பது அவன்றுணிபு. கதிரவன் மைந்தனும் நண்பனும் இதுவே ஏற்ற முறை என்றனன். வஞ்சித்தும் பயனடையாதது பற்றிஅஞ்சிய தந்தை தம்பிமக்களை எவ்விதத்திலேனும் அழிக்கவேண்டுமென்றவாக் கொண்டாலும் வெளியிற் கூறுவதற்கும், செய்து முடிப்பதற்கும் ஆற்றல் அற்றவனாய்க் காணப்பட்டான்.

இதையறிந்த பீஷ்மத்துரோண விதுரன்முதலியோர் ஐவர்களைத் துருபத நாட்டினின்றும் அழைத்து குரு நாட்டிற் பாதி கொடுத்தருள்க வென்றனர். இவ்வாறு வீடுமன் கூறிய காரணம் யாதெனில், சந்தனுவின் நாடு அவனுக்கே உரிமையானது. தன்னுடைமைக்கு இருபாகத்தார்க்கும் ஒரேதன்மையான உரிமை உண்டு. பாண்டவர்க்கு இந்நாட்டிற்சற்றும் தாயபாகம் இல்லையென்றால் கௌரவர்க்கும் அவ்வண்ணமே உரிமையின்று. ஆகையால், நாட்டைப்பகுத்து ஆளவேண்டுமென்பது அவன் முடிபு. பெரியார் அனுமதிப்படி மன்னவன் காடுமலையும் நிறைந்த காண்டவப்பிரஸ்தத்தைப் பாண்டவர்க் களித்தானென்க. பாண்டவர் ஆண்டு சென்று நாட்டை நீர்வளம் நிலவள முடையதாக்கி கோட்டை கொத்தளங்கள் அமைத்து, அரண்மனை ஆலயம் அந்தணர் இல்லங்கள் புனைந்து, பெருநகரங்கள் பலவியற்றி இந்திர நாடு போலாக்கினர். ஆதலால், அதற்கு இந்திரப்பிரஸ்தம் எனப் பெயர்வழங்கிற்று.

---

# நான்காம் அதிகாரம்.

## கலகக் காரணங்கள்.

அவிழ்க்கவியலாதவாறு முடியப் பெற்ற கயிற்றை அறுத்து எறியாமலிருக்க வழியில்லை. அறுத்து விட்ட கயிற்றைத் திரும்பவும் ஒன்று சேர்த்தால் முன் போல் திண்மையாயிராது. அவ்வாறு பிணங்கின குடும்பத்தைப் பிரித்து விடுதலே சிறப்புடைத்து. பிரிந்து போனவர் "உள்ளே மனமெரிய உதடுபழம் சொரிய" என்பது போல் வெளியில் உறவு காண்பித்தால் உலகம் ஏற்றுக் கொள்ளுமா? அன்றியும்,

"நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின வர்பெருமை நொய்தாகும்—பூக்குழலாய்
நெல்லி னுமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினும் திண்மைநிலை போம்." (நன்னெறி)

என்றவான்றோர் கூற்றுக்கிணங்கியே இருப்பார்கள். குரு பாண்டவரது பகை, பாதி நாட்டைக் கொடுத்துப் பாண்டவரைப் பிரித்து விட்ட பின்னரும் நிற்கவில்லை. பெருமழையும் பெருங்காற்றும் வருமுன் காணும் அமைதிபோல் தற்காலம் இருந்தது. முல்லை நிலமாயிருந்த காண்டவ வனத்தை அமராவதி போல் அழகிய நகராக்கினர். மயன் என்னும் சிற்பியால் இயற்றப்பட்ட அத்தாணி மண்டபம், இந்திரசபையும் இதற்கிணையாமோ வெனும்படி தோற்றிற்று. அரசாட்சி வல்லமையாலும், ஈகைக் குணத்தாலும் தேடிய புகழை நிலை நிறுத்தும் பொருட்டுப் பாண்டவர் இராசசூயயாகம் நடாத்த முயன்றனர். தம் புகழை வெளிப்படுத்திப் பெரியதோர் நாட்டைப் பெற்றுக்

கொள்ள இது நல்ல தருணம் என்றுன்னினர். தன்னிளை யோர் எத்திசையும் சென்று வெற்றி பெற்றபொருளை மாற்றரசர்கள் தருமன் திருவடியில் காணிக்கை வைத்தனர்.

சமீபத்தில் நிகழ்ந்த தில்லி முடிசூட்டு விழாவில் நடைபெற்ற விமரிசைகளுக்கிணையான அவ்வேள்விக்குத் துரியோதனனுதியரும் அழைக்கப்பட்டனர். சுயோத னனுக்குப் பாண்டவர்களோடு உட்பகை எவ்வளவு இருந் தும் இராசசூயத்திற்கு போகாமலிருக்கவில்லை. அன்றி யும், யாகச்சடங்கிற்கு வேண்டும் முயற்சிகள் துரியோ தனனுதியர் செய்ததைப்பற்றி மெச்சிப் பேசவேண்டும். காடும் மலைகளும் நிறைந்த பூமியை நாடாக்கியதோடு நில்லாது உம்பர் நாடும் எய்தாவனப்பை எய்துவித்தும், பெரும் போர் வீரருக்கேயன்றி மற்றியார்க்கும் இயலா இராயசூயத்தை நடைபெறச்செய்வித்தும் இருப் பதை ஆய்ந்து நோக்குங்கால் பாண்டவர்கள் கௌரவர் முகத்தில் கரியைத்தேய்த்து விட்டார்களென்பது நன்கு புலனுகும்.

இடையனுகிய கண்ணபிரானை மகத்தில் மேன்மைப் படுத்தி வழிபாடுசெய்தமையால் சிசுபாலன் முதலியோர் மிகுந்த சீற்றம் கொண்டது துரியோதனனுக்குப் பெரு மகிழ்ச்சியை விளைத்தது. போருக்கழைத்தால் அது முடிந்த பின்தான் உணவருந்தும் வழக்கமுடைய அக்கா லத்தில் வேள்வி நடுவில் சிசுபாலவதை நடைபெற்றது அதிசயமல்ல. சிசுபாலவதத்தில் அவதாரமூர்த்தியான கண்ணபிரான் காட்டிய ஆண்மையைக் கண்ணுற்று அகத்த மூக்காறுடைய அரசர்களது அகந்தை அடங்கி விட்டதால் யாகம் இடையூறின்றி இனிது முடிந்தது. கமலக்கண்ணனோடு உறவுபூண்ட பாண்டவரை வெல்ல மூவுலகத்தாராலும் இயலாதென்று பலரும் கூறினர்.

சிற்றரசர்களும் மற்றைய சுற்றத்தாரும் கொணர்ந்த விலையுயர்ந்த பொருள்களை வாங்கித்திறமையாய்ச் செலவு செய்வதற்குத் தருமன் துரியோதனனிடத்துக் கட்டளையிட்டது தங்கள் வல்லமையைக் காட்டும் பொருட்டாம். அந்நோக்கம் முற்றிலும் நிறைவேறிற்று. வேள்வி முடிந்து ஒவ்வொருவரும் தத்தம் நாடடைந்தபின்னரும் துரியோதனன் தன் மாமனாகிய சகுனியுடன் இந்திரப்பிரஸ்தத்திலேயே (டில்லி) தங்கினான். பகைவர்களின் பெருமையைக் குறைக்க அற்றம் நோக்கும் துரியோதனன் மயன் என்னும் அசுரசிற்பியால் அழகாய் அமைக்கப்பட்ட கொலுமண்டபத்திற்குச் செல்லுகையில் ஆங்கு தாமரைத் தடாகம்போல் பளிங்கினால் அமைக்கப்பட்டிருந்த ஓரிடத்தை உண்மையான தாமரைப்பொய்கை யென்று கருதி தன் ஆடை நனையாதிருக்கவேண்டுமென்ற எண்ணத்தினால் தனது துகிலைத் தூக்கிக்கொண்டு சென்றான். பிறகு உண்மையான தாமரைப்பொய்கையைப் பளிங்கினாலமைத்த வெற்றிடமென்று மயங்கி அப்பொய்கை நீரில் விழுந்து துகில் நனையப்பெற்றான். வழியில்லாவிடத்தில் வழியுள்ளதாக முட்டினான். வழியுள்ளவிடத்தில் வழியில்லையென்று தடுமாறினான். இவ்வாறு பல படியாக வருந்தித் திகைத்தனனாக. பீமசேனனும் திரௌபதியும் மற்றுள்ளவர்களும் துரியோதனன் நிலையைப் பார்த்து நகைத்தார்கள்.

"சூழ்ந்த பேரொளிதுளும்பியநிலனை நீரென்றுத்
தாழ்ந்த வந்துகிலிடைவயிற்றழீஇனன் பளிங்கு
போழ்ந்தியற்றியப் பூம்புனலிடைப்போய்
வீழ்ந்தனன் பெருவேத்தவை முகிழ் நகை விளைப்ப."

என்பது பாரதச்செய்யுள்.

இங்ஙனம் அவமானமடைந்த துரியோதனன் துயரத்துடன் அத்தினபுரத்திற்குத் திரும்பிவிட்டனன். பகைவர் எல்லாம் நகைக்கும்படி உயிர்வாழ்வதிலும் இறத்தலே மேன்மையென்றுன்னினான். † "மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை பீடழியவந்த விடத்து" என்ற நீதிமொழி அவனை உயிர்துறக்கத் தூண்டியது. பலத்தினாலும், செல்வத்தினாலும், சேனையாலும் என்றல்ல ஒருவழியாலும் பாண்டவர்களை வெல்ல முடியாது என்றறிந்தமையால் உயிர்நீத்தலே நல்வழி எனத்துணிந்தனன். நேர்வழியிற் செல்லும் மனதை வளைத்துவிடுதல் கெட்ட நண்பர்களது இயல்பென்பதற்குச் சகுனியின் செய்கையே சான்றாம். இராயசூயம் நடாத்தி வெற்றிபெற்ற பாண்டவர்களை வெல்ல இயலாது என்று உயிர்துறக்க எண்ணின துரியோதனனைக் கரிய அரவம் போன்ற சகுனி, தான் யாவும் வென்று தருவதாக உறுதிகூறி அவ்வெண்ணத்தினின்றும் திருப்பி விட்டான். யுதிட்டிரனது மனநிலைமை சகுனிக்கு நன்றாய்த்தெரியும். கவறாடலிற்றருமனுக்குப் பற்று மிகுதி என்றும், வஞ்சனையாய்ச் சூதாட அவனுக்குத் தெரியாதென்றும், போர்க்களத்தில் வெல்லமுடியாப் பகைவரைச் சூதினால் வென்றுவிடலாம் என்றும் உறுதி கூறினன்.

துரியோதனனோ "பகைவரைக்கொல்லும் பொருட்டு எத்தொழில் புரியவும் கச்சைகட்டுவேன்" என்றான். திருதராட்டிரனுக்குப் பாண்டவர்களை அடக்க என் செய்யவும் மனமிருந்தாலும் ஊரார் நகைப்பார்களே என்றெண்ணிச் சூதாட இசையவில்லை. பீஷ்மர், துரோணர்,

விதுரன் முதலிய அவையோர் சூதாடலின் கெடுதியைப் பற்றி நன்றாய் விளக்கிக்கூறினர். ஒருமுறை எண்ணித் துணிந்துவிட்டால் அதிலிருந்து பின்வாங்காமலிருப்பது துரியோதனனது இயற்கை. இராசசூய யாகத்திற்குப் பாண்டவர் நம்மை யழைத்ததற்குப் பதிலாய் அஸ்தினு புரிக்கு ஐவர்களையும் அழைத்து உபசரிப்பது சுற்றத்தார் பெற்றி என்பதும், எல்லோரும் வரும்பொழுது பொழுது போக்கிற்காகச் சூதாடவேண்டுமென்பதும் அவையோர்க் கெடுத்துக் காட்டி யுதிட்டிரனையும், தம்பியர்களையும் அத்தினுபுரிக்கு அழைத்தனன். போருக்காயினும், சூதுக் காயினும் அழைத்தால் பின்னடையலாகாது என்னும் உறுதி தருமனுக்குண்டு. இலங்குநூற்கற்ற இயற்கையறி ஞர்க்கும், தருமவழியில் தம் மனம் செல்லும் தன்மை யோருக்கும் ஊழ்வலியால் தீமை வந்தடையும் என்பது முரசக்கொடியோன் சூதாடத் தலைப்பட்டதிலிருந்து உணரலாகும்.

முன்னாளில் நளன் சூதாடி உரிமைகள் அனைத்தும் இழந்தமை அறிவிற்சிறந்த தருமனுக்கு நன்றாய்த்தெரியும். மனக்களிப்புடன் விளையாட மறுவற்ற செயல்கள் எத்த னையோ விருக்கின்றன. ஆயினும், அறக்கடவுள் எனும் தருமன் சகுனியுடன் சூதாடி பாஞ்சாலியையும் பந்தயம் வைத்த கதை கேட்குங்காலையில் கன்னெஞ்சமும் கரைந்து கண்ணீர் பெருகுகின்றது. எத்துணைப் பகை யிருப்பினும் ஓர் கற்புக்கரசியை இழுத்து வந்து கணவர் காண அவையின்கண் வைத்து மானபங்கம் செய்த துரி யோதனனது கடுமையைப் பழியாதார் எவ்வுலகிலும் எக்காலத்திலுமுளரோ? மாற்றானுக்கு ஆற்றலிருக்கும்

பொழுது நேரிற் சென்றாயினும் மறைவில் வஞ்சனை புரிந்தாயினும் வெல்ல முயலுதல் பிழையன்று. உயிரற்ற பிணத்தைத் தாக்குதல் ஆண்மைக்கழகல்ல. துரியோதனனது இச்செய்கை என்றுமழியாப்பழியாகவே நிற்கும். மகனது அன்பிற்காக எத்தீச்செயலையும் புரியத் தலைப்பட்ட திருதராட்டிரனும் இக் கொடுவினையைப் பழியாதிருக்கவில்லை. திரௌபதியின் ஆறாத் துயரத்தால் அவனது கன்னெஞ்சமும் கரைந்து விட்டது. சூதில் தோற்றயாவும் திரும்பக்கொடுத்து நன்றிகூறிப் பாண்டவர்களை நாட்டிற்கனுப்பினன். சூதாடியபொழுது செய்த கொடுமைகளைப் பீமார்ச்சுனர் மறக்கவேமாட்டார்கள். குருகுலத்தை வேருடன் பிடுங்கிவிடுவார்களே என்று பலவாறு துரியோதனன் எண்ணவே தன் தந்தையின் செய்கை மிக வெறுப்பாய் அவனுக்குத் தோன்றியது. திரௌபதியைத் துகிலுரிந்தமையால் சினங்கொண்ட பாண்டவர்கள் தம் புதல்வர்களை அடியோடு முடித்துவிடுவார்கள் என்ற உணர்ச்சி வரவே திருதராட்டிரனுக்கும் தன் செய்கைபற்றிக் கவலையுண்டாயிற்று. சூதாடும் பொருட்டு மறுமுறையும் அழைத்த திருதராட்டிரனது கொடுமையைப்பற்றிப் புகழ்வதா அல்லது முதலில் தீங்கிழைத்த பொய்ச் சூதை திரும்பவும் ஆடத்தலைப்பட்ட தருமபுத்திரனது தைரியத்தைப்பற்றிப் புகழ்வதா என்று விளங்கவில்லை.

> "உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
> திருவழிக்கு மானஞ் சிதைக்கு—மருவும்
> ஒருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
> பொருவரோ தக்கோர் புரிந்து"

"அறத்தைவேர் கல்லு மருநரகிற் சேர்க்குந்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கு—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து." (நளவெண்பா)

என்ற வான்றோர் கூற்றுக்களும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்குகின்றன. அரசர்களுக்கு எழும் எழு வகைத் துன்பங்களுள் சிறுமை பல செய்து சீரழிக்கும் சூதைப் போற்றிய அறிஞர் யாரேனும் உளரோ? "சூது விரும்பேல்" என அறிஞர் கூறியதற் கிணங்க சபைநடுவே வைத்து பெருந்தீங்கொன்று நிகழ்ந்த பின்னராயினும் தருமனுக்கு அறிவுவந்ததா? அண்மையில் நடந்த நிகழ்ச்சியின் பயனுணரா மக்களும் உளரோ? அன்றியும், தருமபுத்திரர் தகுவன இவை, தகாதன இவையென அறியாதவருமல்லரே. எவ்விதத்திலாயினும் கௌரவர் தன்னையும் தன் தம்பியரையும் வஞ்சிப்பதற்குச் செய்த முயற்சிகள் குன்றின்மேலிட்ட விளக்குப்போல் மிளிர்கின்றன. மேல் வருவனவற்றை யாராயாது இரண்டாம் முறையும் தருமன் சூதாட முற்பட்டது "துன்பம் அனுபவிக்க யாம் முன் வருகின்றோம்" என்பதுபோல் தோற்றுகின்றது. நுண்ணறிவுடைய அவன் தம்பியர்கள் ஏன் தடுத்துக் கூறவில்லை? மூத்தோர் செய்யும் எத்தொழிலையும் மறுத்துரைக்கலாகாதென அறநூற்கள் அறையவில்லை. அரசன் செய்யும் எச்செயலையும் சரியென ஒப்புக்கொண்டு கைகட்டி வாய்பொத்தி நிற்பது தகுதியன்று. அரசன் தீயவழியிற் சென்றால் உடன் மறுத்துரைத்தல் அமைச்சர் கடனாம்.

† "அறிகொன் றறியா னெனினு முறுதி
உழையிருந்தான் கூறல் கடன்"

என்பது அறநூல் துணிபு.

இங்ஙனம் உணர்வில்லாது மறுமுறையும் சூதாடத் தலைப்பட்ட பாண்டவர்கள் சகுனியோடு தோற்றதும், துரியோதனன் வனவாசம் அளித்ததும் தகுதியாகவே முடிந்தன. 'பன்னீராண்டு வனவாசமும்' ஓராண்டு "அஞ்ஞாதவாசமும்" கழித்து நாடு திரும்ப வேண்டும். கரந்துறைதலினிடையே கண்டுபிடித்தால் மீண்டும் இங்ஙனம் காடு செல்ல நேரிடும். இத்தண்டனை அவர்கட்குக் கொடுத்த பொழுது துரியோதனன் இராயசூயவேள்வியிற் பெற்ற அவமானம் சிறிது நீங்கியதாய் எண்ணினன்.

---

# ஐந்தாம் அதிகாரம்.

## வனவாசம்

முன்னதிகாரத்திற் கூறப்பட்ட நிகழ்ச்சிகள் திருதராட்டிரன் மரபு முடிவுற முக்கிய காரணங்களாய் விளங்கினமையால் துரியோதனனுக்கு அவற்றிலெத்துணைக் கடப்பாடுண்டென்பதுபற்றி ஆராய்வாம். பீமன் இழைத்த இடுக்கணால் இளமையில் தோன்றிய பகை அர்ச்சுனன் கல்விப்பயிற்சியில் பெற்ற பெரும்புகழால் வளர்க்கப்பட்டு முற்றிய வரலாறு இதனை வாசிப்போர் சிந்திக்கற்பாலது. எண்ணிக்கையிற் பாண்டவர் மிகக்குறைந்தவராயினும் அவர்களை வெல்வதற்குத் துரியோதனனுக்கும் அவன் தம்பியர்க்கு மியலாதென்பது நன்கு வெளியாயிற்று. அவர்களை வஞ்சனையால் வெல்லமுடியாத காலையில் மிக்க நாணமுற்றனர்.

அர்ச்சுனன் முதலியோர் பாஞ்சாலி சுயம்வரத்தால் முன்னிலும் பன்மடங்கு புகழும் வலியுமுடையராகிப் பெரிய தந்தையிடம் வந்து, பாதிநாடும் உரிமையும் பெற்று, திருதராட்டிரனை விட மேன்மையடைந்தது பற்றித் துரியோதனன் எங்ஙனம் பொறுமை கொள்ளாதிருப்பான்? தன்னைவிடப் பெரியராய், உலகில் யாரும் யாண்டுமிருத்தல் கூடாதென்ற திண்ணிய எண்ணம் துரியோதனனுக்கும் இருந்தது. இது எக்கால மன்னர்க்கும் எழும் எண்ணமாகி விட்டது. இக்குணம் சாலவும் நன்

றெனக் கூறுதல் பொருந்தாது. ஆயினும், வலியோன் செயல் வெற்றி யென்றபடி, முற்காலத்து மன்னர் யாவர்க்கும் வன்மையே நன்மையா யிருந்ததென்பதற்குச் சான்றுகள் பலவுள. அரசர்கள் எத்திசையும் சென்று வெற்றிபெற்று வந்ததையும், இராசசூயம் முதலிய பெரு வேள்விகள் நடாத்தியதையும் உற்றுநோக்குவாருக்குத் தம்மினும் பெரியார் வரலாகாதென்றிருந்த வுண்மை நன்கு புலனும். *தன்னினும் மற்றொருவன் உயர்ந்து விட்டால் பொறாமை கொள்ளும் இயல்புடைய இவ்வுலகிற் பகைவரான பாண்டவர் பெருமை பெற்றதில் துரியோதனன் சமாதான மடையாமலிருந்ததொரு பெருங் குற்றமாகாது. பாண்டவர் தஞ்சுற்றத்தாரல்லரோ? அவர்களடைந்த மேன்மை நூற்றுவர்க்கும் பெருமைதானே: எனப்பல நயமொழிகளைக் கூறி ஈண்டுத் துரியோதனனை மட்டுங் குறை கூறல் தகுதியன்று. இவ்வெண்ணம் பாண்டவருக்கும் வரவேண்டுமன்றோ? திருதராட்டிரன் உயிரோடு நாடாளும்போது, உதிட்டிரன் பாதிநாட்டைப் பான்மையுடன் பெற்றுத்தன் விருப்பப்படி அரசுசெலுத்தத்துணிந்ததுநீதியோ? தாயபாக மேற்றுக்கொண்டு பாகம் பிரிந்துவிட்ட பின்னரும் குருதித்தொடர்பைப் பற்றியெடுத்துச் சொல்வது பயனில் கூற்றும். துரியோதனனுக்குப் பாண்டவர்கள் சிற்றரசர் போலாயினமையால் வெற்றிகொள்வ தக்காலவியல்பாம்.

பாண்டவர்களை அடக்கும் பொருட்டுக் கையாண்ட சூழ்ச்சி நன்மையோ தீமையோ என்பதையும், அங்ஙனம் செய்ய துரியோதனனைத் தூண்டிய தீக்குணம் இன்ன

தென்பதையும் பற்றி சற்று சிந்திப்பாம். மற்றைய மன்னரை நேரில் போர்செய்து அடக்குவதே முறை. இயற்கையிலேயே இகன்மதம் உடையோரும், உம்பராலும் வெல்ல முடியா வீரம்உடையோருமாகிய பாண்டு மைந்தர்களை முன்னிலையில் எதிர்க்க இயலாதென்பதை இராயசூயவேள்வியிற் பாண்டவர் காண்பித்த தன்வலியும் துணைவலியும் நன்குய் விளக்கிவிட்டன. புறநட்புடன் இராயசூயத்திற்கழைத்துத் தற்பெருமை காட்டிய பாண்டவர்கள் தன்னுள்ளத்தில் கனல் வைத்ததாயுணர்ந்த துரியோதனன் சதிவாய்ப் பாண்டவரது புகழை யொழிக்கமுயன்றது மக்கள் இயற்கையை மாண்புடன் விளக்கிற்று.

"பொறை யெனப் படுவதாடவர் தமக்குப்
பூணெனப் புகலினும்பொருந்தார்
முறையறப் புரிந்தாற் கணத்தவர்தம்
முடித்தலை துணிப்பதே முழுப்பூ
ணறை மலர்க் குழலார் தமக்கு மெய்
யகலாநாணமே நலஞ்செய் பூணெனினு
நிறையுடைப் பெரும் பூணமளிவாய்
நாணநிகழ் வுரு நிகழ்ச்சியேயன்றே."

எனுமுயர்மொழிபோல் மிதிப்பாரைக் கடியாப் பாம்பும் உளதோ. அன்றியும், நீண்ட நாள் இரையிலாது வருந்துமோர் அரவம் மிதித்தவனை எளிதில் விடுமோ? அவ்வாறே பன்னாளாக வளர்ந்தோங்கிய பகையும் கொடுஞ் செயலில் முடியாமலிராது. பாண்டவர்களை எவ்வாற்றானும் கொலைபுரிய வேண்டுமென்று புறப்பட்டதால் துரியோதனனுக்கியர்க்கு பல்லாற்றானும் மானக்கேடு நேரிட்டது. மிக்க ஊக்கத்துடன் கீழ்நோக்கி எறியும் ரப்பர்ப் பந்து முன்னினும்

மும் மடங்கு ஊக்கததில ம்மஞகக எழுவதுபோற் பாண்டவர்கள் மென்மேலும் உயர்ந்துகொண்டே இருந்தனர். ஆகவே, கரைகாணவியலாத் துயர்க் கடலில் மூழ்கிய துரியோதனன் சகுனியின் சூதாட்டமெனும் கட்டுரைத் தெப்பத்தை உயிர்த்துணையாகக்கொண்டது மிக்க இழிவெனக் கூறலாம். மாந்தர்க்கு உயிர்நிலை மானமன்றோ? துரியோதனன் சுத்தவீரனாதலாற் பகைவர்களை வெளிப்படையாகவும், ஒளிந்தும் எதிர்க்க முயன்றது பெருங் குற்றமாகாது. சூதாடல் நன்றன்றெனினும், அக்காலத் தரசர்களுக்கு மிகுந்த களிப்பை அளிக்கும் புதுமைகளி லொன்றாகவே இருந்ததென்பதற்கையமில்லை. அன்றேல், தருமனிதற்குத் தலைப் படுவானோ? பின் களவாய்க் கவறாடியது குற்றமாகலாம். அக்குற்றத்திற்குத் துரியோதனனினும், தருமனையிருமடங்கு குறை கூறவேண்டும். வஞ்சனையாய்ச் சூதாடினவுடன் தருமன் ஏன் பின்வாங்காதிருந்தனன்? அஃதுடனில்லாது, மீண்டுஞ் சூதாடிநாட்டையும் பொருளையும் மனைவியையுந் தம்பியரையும் பந்தயம் வைக்க எவரேனும் வற்புறுத்தினரோ? கும்பிடப் போனதெய்வங்குறுக்கேவந்தது போலவும், தேடின மருந்து காலிற் பட்டது போலவும் நெடுநாளாய் மாற்றானைநசுக்கத் தருணம் பார்க்குமொருவன் முன்னிலையில் தாமாகவே வந்து வீழ்ந்தால் எளிதில்விடுவானோ? இடையூற்றினின்றுங் கைதூக்கிவிடத் துரியோதனன் மனம் எவ்வாறு துணியும்? கொடிய பகைவனைக் காப்பாற்ற வேண்டுமென்றெண்ணுவோர் துரியோதனனைப்பழித்துக்கொள்க. 'பெயக்கண்டும் நஞ்சுண்டமைவோர்' உலகிற் சிலர்தாமுளர். அன்றியும்,

† "வினைபகை யென்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும்"

என்பதால் துரியோதனன் பகைஒழிக்கக் கருதினன்.

பாண்டவர்களோடு பகைத்ததையும், அவர்களை வஞ்சித்ததையும், மாயச்சூதாடித் தோற்கச்செய்ததையும் பற்றிக்குறை கூறாதவர்களுங்கூட, ஐவரின் கற்புடை மனைவியை, அவைநடுவே துகிலுரிந்த துரியோதனன் மீது குற்றம் சுமத்தாதிருக்க மாட்டார்கள். துரியோதனனது இப்பழிதொழிலுக்குத் தகுந்த நியாயங் கூறுவதற்கில்லை. இங்ஙனஞ் செய்ய அவனைத் தூண்டியது முன் இராயசூயத்தில் பளிக்கறையின்கண் வைத்து அவமானித்ததேயாம்.

† "பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்"

"இந்திரப்பிரஸ்தத்தில், எம் தலைவன் துரியோதனனை நகைத்த உனது வாயானது இப்போது உன்தலைவனைக்கண்டு, அழுது, அரற்றுமாறு யாங்கள் அவனைப் பரிகசித்துச் சிரித்தால் நீ மனம் பொறுக்க மாட்டாயோ? அப்பொழுது செய்த வினையின் விளைவை யிப்பொழுது அடைந்தே தீரவேண்டும்" எனத்திரௌபதியை நோக்கித் துச்சாதனன் இழித்துரைத்தானென்க. இஃதை வில்லியும் வருமாறு விளக்குகின்றார்:—

* "பொன்னைச் சிரிக்கும் பூங் கோயில்
புனல்வாவியிலன் றெங்கள்குல
மன்னைச்சிரித்தசெங் கனிவாய் மாறு
திரங்கியழுதரற்ற
மின்னைச்சிரிக்கு நுண்ணிடையாய் வேந்தர்க்
கெதிருன் மெய்க்கணவன்
தன்னைச்சிரிக்க விருக்கின்ற சளநீ
காணிற்றரியாயோ".

துச்சாதனன் கூறிய இச்சமாதான மனைத்தும் கதிரவனைக்கண்ட பனிபோல் அகன்றுவிடும்.

பெரியார் ஒவ்வொருவரது சரிதமும் நுட்பமாய் உணரப் புகுந்தால் அவர்களது வாணாள் முழுவதும் பரவுமோர் முக்கிய நிகழ்ச்சி தென்படாமலிராது. உலகபாலகனும் மானிடஉருவில் தோன்றியவருமான இராமபிரான் வானர வீரனும் வாலியைக் கொன்றது நீதியோ? இதற்குத்தகுந்த விடைகள் இராமாயணத்தில் யாண்டும் கண்டிலம். இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவனும் இங்ஙனம் செய்தால் கைமுதிக நியாயம்போல் சின்னாள் பல்பிணிச் சிற்றறிவுடைய துரியோதனன் செய்தது வியப்பு அன்றெனச் சிலர் செப்புவர். அவர்களது வாணாளை வீணாக்குவதும் நன்னாளாக்குவதும் அச்செய்கையே. அதற்குமுன் நிகழ்ந்தவை அதனைப் பயன்படுத்தும் நன்னெறியும், பின் நடப்பவை அதன் பயனுமாய் முடியும். துரியோதனன் சரிதமாகிய அரங்கின் திறவுகோல் திரௌபதியின் துகிலுரிதலேயாம். இக்கொடுவினையொன்று நிகழாதிருப் பின் சூதினாற் பெற்ற நாட்டை மீளவும் கொடுக்க வேண்டுவதில்லை. பாண்டவர்கள் ஆறாத்துயரத்துள் அமிழ்ந்து விடுவார்கள். துரியோதனனுக்கோ தன் விருப்பம்போல் நாட்டை அடக்கி ஆளலாம். நெறிதவறி பாஞ்சாலியைத் துகிலுரிந்ததால் எளிதிற் கிடைத்த நாட்டைத் திரும்பக் கொடுப்பதற்கும், பின்னால் நடைபெற்ற பெரும்போரில் துரியோதனன் தன் குடும்பத்தோடு உயிர் துறப்பதற்கும் நிமித்தமாயிற்று.

பாண்டவர்களைக் கானகத்திற்கு அனுப்பிய பின்னரும் சுயோதனன் இன்பமாய் இருக்கவில்லை. சுற்றத்தாரைச் சதித்தது தகுதியல்லவென்று அவையோர் பலரும்

இவன் மனதைப் புண்ணாக்கின. இவர்கள் உயிரோடு இருக்குமளவும் தனக்கு நன்மையில்லையென்று முற்றுந் துணிந்தனன். குருட்டுமன்னனும் இதைத் தெற்றென உணர்ந்து வாட்டமுற்றனன். கான்சென்றும் பாண்டவர்கள் வாணாளை வீணாளாக்காமல் போர்க்குரிய முயற்சிகள் செய்து வந்தனர் என்பது கௌரவர் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதிந்துவிட்டது. நாட்கள் செல்லச்செல்ல தம்மக்களுக்குக்கேடு அணுகிக்கொண்டேவருவதாக திருதராட்டிரன் கவலையுற்றனன்.

உதிட்டிரனையும், தம்பியரையும் காட்டிற்கனுப்பிய பின் துரியோதனன் அரசாட்சியை முறையாய் நடாத்தினன். அறவோர்க் களித்தல், அந்தணர் ஓம்புதல் முதலிய கடமைகளை வழுவாது இயற்றி தருமபுத்திரன் செய்து வந்தவைகளைப் பொன்னே போல் பாதுகாத்து வந்தமையால் அரசியல் முறையில் துரியோதனனைப் பழித்துரைக்க எவ்வாற்றானும் இயலாது.

அன்னவன் உயிர்த் தோழர்களான சகுனிக்கும், கன்னனுக்கும் பாண்டவர்க்குத் தீங்கொன்றும் புரியாது வாளாஇருத்தல் வருத்தமாய்த் தோன்றிற்று. அடவியிலிருந்த ஆடவர் ஐவரிடத்தும் தன் ஆண்மையைக் காட்ட வேண்டுமென்று துரியோதனனைத் தூண்டி விட்டார்கள். 'அழவேண்டும் என்று இருப்பவனை அகமுடையானும் அடித்தாற் போல' துரியோதனனும் முன்னுக்குப் பன்மடங்கு மும்முரமாய்ப் புறப்பட்டான் என்க. பாண்டவர்களை எதிர்ப்பட்டால் யாதேனும் சண்டை விளைத்துவிடுவார்களோவெனத் திருதராட்டிரனுக்கு அச்சமுண்டாயிற்று. இவ்வெண்ணத்தை முற்றிலும் மாற்ற சாணக்கியன் போன்ற சகுனிக்கு வல்லமையில்லாது.

போமோ? அந்நாளில் பெற்றமும் பெரு நிதியாய் இருந்தது. மண்ணில் உழுதுண்போர்க்குக் கன்றுகாலிகள் இன்றியமையாக் கருவிகள் ஆகும். ஆனிரைகளைக் கானகத்திற் கொண்டு சென்று நன்றாய் மேய்த்து வருவதும் ஆண்டுக்கோர் முறை அவற்றை எண்ணித் திட்டம் செய்வதும், ஒவ்வொரு இனத்திலும் எத்தனை இருக்கின்றன என்று உரிமையாளரைத் தெரிவிப்பதும் ஆயர்களது கடமையாயிருந்தன. நிரைகளின் நிலைமையறியும் பொருட்டுத் துரியோதனனை வனத்திற்கனுப்பும்படி கன்னனும் சகுனியும் மன்னனிடத்தில் வேண்டினார்கள். அரசன் முழுமனதோடு ஒப்புக்கொள்ளவில்லையாயினும் அவனிடம் விடைபெற்றுக்கொண்டு கௌரவர் பெருங் களிப்புடன் புறப்பட்டு விட்டனர். நால்வகைப் படைகளும், உற்றார் பலரும், குயிலுவர் சிலரும் குடைசாமரை ஆலவட்டம் முதலிய பலவும், புடை சூழ்ந்து செல்லவும், மிகுந்த ஆர்ப்புடனும் பெருமையுடனும் இடையில் பல்லிடங்களிலும் தங்கி அடவியை அடைந்தனர். வேட்டையாடும் பொருட்டு வேண்டிய வசதிகள் உண்டுபண்ண அனுப்பப்பட்ட சேவகர்களைச் சித்திரசேனன் முதலிய கந்தருவவீரர் துரத்தியோட்டிய செய்தி துரியோதனன் கேட்கவே பெருஞ் சீற்றம் கொண்டான். கந்தருவர்களுமாய்ப்புரிந்த பெரும்போரில் வாயாடியான கர்ணன் ஓட்டம் பிடித்தான். துரியோதனனும், தம்பியர்களும், அந்தப்புர மாதர்களும் அவர்களால்கட்டுண்டனர். அமைச்சர் அச்சமுற்றுத்தருமனிடம் வந்து இக்கடுஞ்செய்கையைத் தெரிவித்தனர்.

அப்பொழுது பீமார்ச்சுனர்

† "பிறர்க்கின்னா முற்பகல் செய்யிற் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்"

என்றுகூறி மகிழ்ந்தனர். இதனைக்கேள்வியுற்று அறமே உருக்கொண்ட தருமன் கந்தருவர்மீது கடுங் கோபம் கொண்டான். தம்பால் அடைக்கலமெனப் புகுந் தோன் யாவனேயாயினும் ஆண்டருள்வது தம் கடமை என்றும் அன்றியும், துரியோதனனாதியர் தம் உடன் பிறந்தார் எனவும் எண்ணினன்.

† "இன்னா செய்தார்க்கு மினியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு"

என்றவுறுதி யுரைக்கேற்ப நடந்த தருமபுத்திரனது பெருந் தன்மை உள்ளங்கை நெல்லிக்கனி போல் செவ்வனே விளங்குகின்றது. 'விரைவாய்ச் சென்று விசித்திரவீரியனை வென்று தாயாதிகளின் கட்டவிழ்ப்பாய்' என்ற மூத்தோன் மொழியைச் சிரமேற்றாங்கி அர்ச்சுனன் முதலியோர் சென்ற பொழுதே விசித்திர வீரியன் கௌரவர்களை அனுப்பிவிட்டான். சிறையினின்றும் விடுபட்ட துரியோ தனன் தருமபுத்திரனைக் கண்ணுற்ற பொழுது தலை குனிந்து வெட்கமுறவே தருமன் அவர்களை நோக்கி,

† "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்"

என்ற அருமைத்திருவாக்கின் பெருமையைக் கூறியது துரியோதனனுக்குப் புண்ணில் கொள்ளி பட்டாற்போ லாயிற்று. இங்ஙனம் தீராஇழிவுடன் உயிர்வாழ்வதினும் சாதலே நலம் என்று துரியோதனன் எண்ணியது அதிசயமன்று. தன் மயிர்த்திரளில் ஒரு மயிர் நீங்கினும்

கவரிமான் உயிர் வாழாதன்றோ? இத்தகைய சான்றாண்மையெல்லாம், துரியோதனனுக்கு அப்பொழுது தானுதித்தன.

"துர்வினீதம்ச் ரீயம் ப்ராப்ய வித்யாமைச்வர்ய மேவச
திஷ்டந்தினசரம் பத்ரேயதாஹம் மதகாவித:"

என்றபடி துரியோதனனது துன்பத்தை யகற்ற கர்ணன் தன்னாலியன்ற மட்டும் முயன்றும் பயனடையவில்லை. அதற்காகவருமாறு பற்பல நியாயங்களையும் எடுத்துக் கூறலாயினான். 'போரில் தலைவர் இருவர்தாம் வெற்றிபெற்றதாகக்கூறினால் இருவர் மட்டும் போராடினதால் வெற்றிகிடைத்தது என்று எண்ணுதல் முறையோ? சேனையின் உதவியில்லாவிடின் தலைவர் வெற்றியடைதல் எங்ஙனம் இயலும்? வெற்றியடைந்தவர்கள் போர்வீரர்களா என்று வினவினால் படைத்தலைவனே வெற்றி பெற்றான் என்பர். அவ்வண்ணமே, குடிகள் கொற்றவனுக்கு நற்றுணைபுரிவது அவர்கள் கடமையன்றோ? பாண்டவர்கள் காட்டிலிருந்தாலும், நாட்டிலிருந்தாலும் குடிகள்தானே. அரசனுக்கு இடுக்கண் வந்தவிடத்துக் குடிகள் என்ற நிலையில் உதவி புரிந்தார்களே யல்லாது வேறு என் செய்தார்கள்? ஆகவே, பாண்டவர்கள் தங்கள் கடமையைப்புரிந்தார்களாதலால் அதற்கு இவ்வண்ணம் துயர் உறுதல் தகுதியாமோ?' இம்மொழிகள்யாவும் வணங்காமுடி மன்னனுக்கு காட்டிலழுதாற்போலாயிற்று.

"அகமுடையான் செத்தபின்பு அறுதலிக்குப்புத்தி வந்தது" போல் துன்பம் வந்தகாலையில் வெறுப்புத் தோன்றுதல் யாவர்க்கும் இயற்கையே. இம்மயான வைராக்கியம் நீர்க்குமிழிபோல் அப்பொழுதே மறைந்துவிடும். பலவழியானும் துன்பம் எய்திய காலத்து அடங்காதவர்களைத் தீவினையாளர்களென்றே கூறவேண்டும்.

கௌரவர் தங்கள் முன்னேற்றத்திற்காகக்கொடுவினைபுரிய வெறுப்படையாததற்குக் காரணங்கள்பல. அருகிலிருக்கும் நண்பர்களின் கோட்சொற்களும், பகைவர்களை நேரில் வெல்ல முடியா வல்லமைக் குறைவும், பன்முறையும் பகை செய்த பழக்கத்தின் வலியும் தீமைகள்புரிய துரியோதனனை எழுப்பிவிட்டன. தன்முயற்சிகள்யாவும் அவலமாய்ப் போன போது பாண்டவர்களை வெல்ல இயலாதென்றுன்னி உயிர்நீக்கத் துணிந்தது தகுதியோ? துரியோதனனுக்கு இவ்வெறுப்பு நிலைநின்றுவிட்டால் பாரதக்கதையை அடியோடு மாற்றவேண்டுவது தான். தற்பொழுது பிசாசு, பாதாள உலகில் துரியோதனனைக் கொண்டு சென்று பாண்டவர்களை வெல்லும் பொருட்டு தாம்செய்த முயற்சிகளைக்கூறி அவனைத் தேற்றியதின் கருத்து வேறல்ல. தன்னடக்கம் இல்லாதார் ஆழ்ந்த சிந்தையுடன் எச்செய்கையையும் முடிக்குமுபாயத்தை எண்ணி இருப்பதைப் புலவர் கனவின் தன்மையாய் வருணித்திருக்கின்றார். துரியோதனன் முன்னிருந்த இடத்தினின்றும் திடீரென்று எழுந்து மிக்க வீரத்துடன் அஸ்தினபுரிக்கேகினன். வாய்மையே விரதமாக்கொண்ட வீடுமன், கந்தருவவீரருமாய் நிகழ்த்திய போரில் கர்ணன் ஓட்டம் பிடித்ததைப்பற்றி இகழ்ந்து பாண்டவரின் நிறைமையைப் புகழ்ந்து, மேல் அவர்களுடன் உறவாடுதல் நலமென்று அறிவுறுத்தினன். வணங்காமுடி மன்னனாகிய துரியோதனன் இதனைத்தகுதியென்று ஒப்பவில்லை. அருச்சனனுக்கொத்த வீரன் கர்ணன் என்று காட்டும் பொருட்டு அவனைத் திக்குவெற்றி செய்யச்சொல்லி இராயசூயத்திற்குப் பதிலாக வைணவவேள்வி ஒன்று மிகச்சிறப்பாய் நடாத்தினன் என்ப. ஆண்டு குழுமிய பேரவையின்கண் தானே அருச்சுனனைக் கொல்வதாகக் கர்ணன் கடுஞ்சினம் மொழிந்தான்.

# ஆறும் அதிகாரம்.



## நிரை கவர்தல்.

தம்முயிரைக் காப்பாற்றினவர்களிடத்தும் அவமானத்தைப் போக்கியவர்களிடத்தும் எவ்வளவு பகை இருப்பினும் நன்றி பாராட்டாதார் கன்னெஞ்சமுடையார் என்று கூறவேண்டுவது தான். சித்திரசேன கந்தருவனிடத்தினின்றும் தம்மை விடுவித்த பாண்டவர்களை, துர்வாசமுனிவனை அனுப்பி சூழ்ச்சிபண்ணிய துரியோதனனது வேரூன்றிய பகை எல்லையற்றதே. காமாலை நோயுற்றார்க்குக்கண்டபொருளனைத்தும் மஞ்சள் நிறமாய்த் தோன்றுவது போல் பாண்டவர் புரிந்த இந்நன்றியும் துரியோதனனுக்கு மாற்றார்தம் அகந்தையை வெளிப்படுத்தியதாய்த் தோற்றியது. எத்தனையெத்தனை நன்மையான செய்கைகள் இங்ஙனம் இவ்வுலகில் முரணைத் தோன்றி அவலமாய்ப் போகின்றன.

அறமே அருங்கலனைகப் பூண்ட பாண்டவர் பன்னிரு வருடமும் ஒருவாறு வருந்திக் கழித்து விட்டதோடு அஞ்ஞாதவாசத்தையும் மிகஎளிதில் முடித்துக்கொண்டது பெரியோர் திருவருளால் என்று வியாசர் கூறியது உயர்வு நவிற்சியன்று. இடருற்றகாலையில் தந்திரத்தால் அதில் நின்றும் விலகிக் கொள்வதற்குப் புல்லறிவாளரும் முயல்வர். வேடம் மாறி விராட நகரியில் ஐவரும் கரந்துறைந்தமை யாவரும் அறிந்ததே. தன்னரண்மனையில்

ஐவகைத்தொழிலில் அமர்ந்த பாண்டவர்களை இன்னாரென்று அறியா விராடனது வல்லமையை என் சொல்வோம். பாண்டவர் நிலைமையைத் துரியோதனனாதியரும் அறியாமற்போனது வியப்பாகவே தோன்றுகின்றது. நட்டார், பகைவர், நொதுமலர் ஆகிய முத்திறத்தாரிடத்தும் நிகழ்வனவற்றை நாடோறும் ஒற்றனாலே விரைந்தறிதல் அரசனுக்குரிய தொழிலாகும்.

† "ஒற்றினால் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றம் கொளக்கிடந்த தில்"

என்னும் அருமொழிபோல் ஒற்றனால் பகைவர்தன்மையை அறியாத மன்னவன் வெற்றியடைய மாட்டான் என்க. கோலாகலத்துடன் தாம் காட்டிற்குச் சென்ற காலையில் காணப்பட்ட பாண்டவர்கள் திடீரென்று மறைந்துவிட்டது எங்ஙனமென்று கௌரவர் ஆராயாமலிருக்கவில்லை. நாற்றிசையும் அனுப்பப்பட்ட ஒற்றர்கள் அவர்களைக் காணாது திரும்பிவந்தனர். கொடிய விலங்குகளாலோ, நெடிய அரக்கர்களாலோ கொல்லப்பட்டிருக்க வேண்டுமென்று துரியோதனனும் உறுதி கொண்டனன். அரைகுறையான இத்தகைய ஆராய்ச்சியை மெச்சிப் பேசுதல் தகுதியன்று. கீசகன் வதையை அறிந்தவுடன் துரியோதனன் சற்றுகலங்கினான். ஓர் கந்தர்வன் கீசகனைக்கொலை புரிந்தான் என்ற வெள்ளறிவாளர் கூற்றை அவன் நம்பவில்லை. உயிர்துறந்தவன் கீசகனாயின், கொலைபுரிந்தவன் பீமனேயாவான் எனத் துணிந்தனன். அப்பொழுது தான் பாண்டவர்களைக் கண்டுபிடிக்கும் பொருட்டு மிகுதியான முயற்சி செய்யலானான். முன் அவர்களுக்கு

வரையறுத்துக்கூறப்பட்ட நாட்கள் கழிந்த ஏக்கமும் மன தில் உதித்தது. திருகர்த்தன் விராடநகரத்தின் தென்றிசையிலும், துரியோதனன் சேனைகளுடன் வடதிசையிலும் சென்றுப் பசுக்கூட்டத்தைக் கவரத் தலைப்பட்டார்கள். "பாண்டவர் போர்வீரரும், தலைவர்மீது அன்புடையோருமாதலால் விராடனுக்குற்ற இடையூற்றை நீக்கும் பொருட்டு முன்வராமலிருப்பரோ? அப்பொழுது அஞ்ஞாதவாசம் அறியப்பட்டதாய்த் திரும்பவும் காட்டிற்கனுப்பிவிடலாம். அல்லது, அவர்கள் இல்லாதிருந்தால் ஆனிரைகளைக் கொண்டுவருவதோடு கௌந்தேயர் உயிர் துறந்ததாய் உறுதியும் கொள்ளலாம்" என எண்ணினன். "ஆடுவதுமாடி அவரைக்காயும் பறித்தது போல" ஒரு வினையால் இரு வேறுகாரியங்களை முடித்துக்கொள்வதும் திறமைதான். தேகளீதீபநியாயம்போல்,

† "வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று."

என்றார் பெரியாரும். இவ்விதஎண்ணத்தோடு போருக்குச் சென்றனர். இந்நுட்பம் சின்னோருக்கு முன் கருதவேண்டுவதாயிற்று. எப்பொழுதும் தமக்கே பகடை பன்னிரண்டு என்று எண்ணுகிறவர்களுக்கு எதிலேனும் தோல்வி வராமலிராது. அவ்வாறு துரியோதனனுக்கும் நேரிட்டது. பாண்டவர்கள் உறையும் இடம் கண்டு பிடித்தார்கள். ஆனால் குறித்த காலம் கழிந்துவிட்டது.

திருகர்த்தன் தென்றிசையிலுள்ள பசுக்கூட்டத்தைக் கவர்ந்து சென்ற செய்தியை இடையர் அரசனுக்குத் தெரிவித்தனர். முறையின்றி நம்மொடு எதிர்க்கவந்த

இவர்களை எளிதில் விடலாகாதென்றுன்னி விராடன் நால் வகைப்படையோடும் போருக்குப் புறப்படவே அத்தரு ணத்தில் துரியோதனன் வடதிசையில் கொள்ளையடிக்கத் தலைப்பட்டான். இளவரசனாகிய உத்தரன் ஒழிய எவரும் தலைநகரில் இல்லை. ஆயர்கள் இச்செயலை இளவரசனுக்கு அறிவிக்கவே, தகுந்த ஓர் தேர்ப்பாகன் கிடைக்குமாயின், இக்குருகுலத்தாரை அறவே முடித்து விடுவதாய்ப் பெண்கள் முன்னிலையிற் பெருமைபேசினன். இளவரசனை அவமதிக்கும் பொருட்டு திரௌபதியாகிய மாலினி பேடியுருக்கொண்ட அருச்சுனனை நோக்கி 'இப்பேடி தேரோட்டுவதில் கைதேர்ந்தவள்' என்றுகூறித் தேராளி யாக்கினள். தன்னரண்மனைக்கப்பால் பார்த்திராத உத்த ரன் கடல்போன்ற கௌரவ சேனையைக் கண்ணுற்றுக் கலங்கி உயிர்துடிக்கத், தேர்ப்பாகனை நோக்கித் தொழுது தன்னரண்மனையில் மீளவும் கொண்டுவிடுவதற்கு கெஞ்சிக் கேட்டனன். இப்பொழுது தான் பேடிவடிவான ஆடவன் கிரீடிஎன்றறிந்தார்கள். முதலில் துரியோதனன் நம்ப வில்லை. பீஷ்மத்துரோணுதியர் அருச்சுனன் பெருமையை இயம்பிய பொழுது கர்ணன் குரவர்களைப் பழித்துக் கூறலானுன். காண்டீவத்தின் கடுமையான நாணெலியும் தெய்வச்சங்கின் முழக்கமும் காதிற்பட்ட பொழுதே கௌரவசேனை கிடுகிடென்று நடுங்கிற்று. அப்பொழுது துரியோதனன் காட்டிய காலத்திற்கேற்ற நுண்ணறிவு மன்னரனைவரும் புகழ்ந்து கொண்டாடத்தக்கதே. தம் போர்வீரர்கள் கலங்காது தைரியம் கொள்ளுமாறு,

† "கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை"

† "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு"

என்ற வீர இலக்கணங்களை எடுத்தோதியும், போர்க்களத்தினின்றும் மெல்ல நழுவத்தொடங்கிய ஆசிரியர்களிடத்து தன்னை மன்னிக்கும் பொருட்டும் கேட்டுக்கொண்டான். மாற்றார் முன்னிலையில் புறமுதுகு காட்டும் இழிவு அணுகாமல் பாதுகாத்தலோடு மறைந்து வாழுங்காலம் முடியாததால்* அருச்சுனன் நேரில் வாரான் என்றும் வீரர்களுக்குணர்த்தினன். ஆண்டுகளின் கணக்கு நோக்கியதில் தலைநாள் காலவரையறை முடிந்து விட்டதாகவும் அதினால் பாண்டவர்களோடு சமாதானம் செய்து கொள்வதே தகுதி எனவும் கூறிய பாட்டன் வார்த்தையைக் கேளாது போர் புரியும்படி தானைத் தலைவர்களுக்குக் கட்டளையிட்டனன். அருச்சுனன் இயற்கை வேடத்துடன் மோகனக்கணையைச் செலுத்திக் கௌரவர்களை வென்று பசுக்களை மீண்டதோடு உத்தரையின் மகிழ்ச்சிக்காக அன்னார் ஆடை அணிகலன்களையும் வௌவிக் கொண்டு முன்போல் அலிவேடம் புனைந்து விராடநகரிக்குத் திரும்பி வந்தனன். அப்பொழுது உத்தரனுக்குண்டான உவகைக்கு எல்லையில்லை. தென்றிசையில் பீமனது உதவியால் விராடனுக்கு வெற்றி கிடைத்தது. தலைநகரில் வந்தபொழுது விராடவரசன் தன்மகன் பீஷ்மர் துரோணர் முதலிய மகாரதர்களையும் வென்று விட்டதாய்ப் பெருங் களிப்பெய்திய காலையில் கங்கன் அன்றென மறுத்துக் கூறவே தருமன்மீது தடியெடுத் தெறிந்தனன். கங்கன் முதலிய ஐவரும் மாறுவேடம் பூண்ட பாண்டவர் என்றறிந்த விராடன்மிக்கவருத்தமுற்றுத் தன் அறிவின்மையால்

இழைத்த செய்கையை எண்ணி எண்ணி வருந்தி அருச்சுனன் புதல்வன் அபிமன்னனுக்கு தன் மகள் உத்தரையை மணம் செய்து கொடுத்து மன்னிப்புக் கேட்டான்.

நிரைமீட்சிப் போரினின்றும் மீண்ட துரியோதனன், காலவரையறைக் கழியாக் குற்றத்தைப் பாண்டவர் மீது சாட்டத்துணிந்தான் என்க. பிறராறியாவாழ்வு கழியுமுன் பார்த்தன் வெளி வந்ததால் மறுமுறையும் பன்னீராண்டு காட்டிற்கேகுமபடித் தருமனுக்குத்தெரிவித்தான் பதின்மூன்றுண்டுகளும் கழிந்து விட்டனவோ இல்லையோ என்ற ஐயம் வீடுமன் தீர்த்தால் அத்தீர்ப்பைத் தருமன் ஏற்றுக்கொள்வதாகக்கூறியதற்குப்பாட்டன் பதின்மூன்று வருடமும் சரிவர நிறைவேறியதாய்க்கூறியதால் துரியோதனன் சற்று அடங்க வேண்டுவதாயிற்று. ‘இனிச்சூழ்ச்சியொன்றும் செல்லாது; திறமையாய்ப் போர் புரிந்தாலன்றி நாடு நமக்கில்லை’யெனக் கௌரவர் அறிந்தனர்.

விராடன் ஐவருக்கும் தகுந்த உபசாரம் செய்து தூதர்வழி மணவோலையனுப்பி கண்ணன் முதலிய உறவினர்களையும், மற்றும் அரசர்களையும் வரவழைத்து அபிமன்னனுக்குத்தன் மகள் உத்தரையை மணம் செய்வித்தகதை முற்கூறியதே. பின்னர் பாண்டவர் விராடனால் அமைக்கப்பட்ட உபப்பிலாவிய மென்னும் பட்டினத்தை யடைந்து, கண்ணன் முதலிய சுற்றத்தாருடன் விராடன் அவைக்களத்தையண்மி மேற்செய்வனவற்றைச் சிந்திக்கலாயினர். முதன் முதல் உலகமுதல்வனுகிய கண்ணன் தன் கருத்தை வெளியிட்டனன்.

கண்ணன் அவையோரை நோக்கிக் கூறியது:—"அன்பர்காள்! கொடியோனாகிய சகுனி உதிட்டிரனைச் சூதினால் வென்று நாடு நகரமுதலிய யாவும் பிடுங்கிக்கொண்டு அவனைத் தம்பியர்களுடனும் மனைவியோடும் அடவிக்கனுப்பியது நீவிர் அனைவரும் நன்றாய் அறிவீர்களே. அன்றியும், பன்னீராண்டு வனவாழ்வும் ஓராண்டு மறைவாழ்வும் அளித்தமை எத்துணைக் கொடிய செயலாகும்? இக்கடு நோன்பினையும் அவர் சரிவர நிறைவேற்றினர். கானகத்தில் துய்த்த துன்பத்தை யாம் எடுத்துக்கூற வேண்டுவதில்லை. இனி நாட்டின் உரிமையைக் கேட்கவேண்டுவது நம் கடமை. ஒரு விஷயம் உண்மையானது. ஈன்றாள் பசியை வறுமையாலே கண்டிருக்கும் தன்மையனாயிருப்பினும் தருமன் சான்றோர் பழிக்கும் வினையைச் செய்யான் என்றுணர்க.

† "பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை"

என்ற உறுதிப்பாடுமுடையனாதல்பற்றி உரிமையல்லாதனவற்றைப் பெற்றுக்கொள்ள தருமனுக்குச் சற்றேனும் விருப்பம் இல்லை. ஆயினும், குருநாடு பாண்டு மன்னன் ஆண்டுவந்ததென்பதும், தந்தையின் உடைமைமக்கட்கென்பதும் தங்களுக்குத் தெரியாததல்ல. முறைப்படி நாடு முழுமைக்கும் உரியவர்களான ஐவரையும் வஞ்சித்தது நினைவினின்றும் நீங்காததன்றே. அங்ஙனம் தீங்கிழைத்தவர்களிடத்தும் தருமபுத்திரன் நன்மையே புரியலாயினன். மறு பாகத்தார் பாண்டவர்களைப் போரில் வென்று நாட்டை எடுத்துக்கொண்டால் திரும்பக்கேட்பது தகுதியன்று. அதுவும் நடைபெறவில்லை. அருச்சுனன் திக்குவிசயம் செய்து ஈட்டிய நாடுமட்டும் வேண்டுமென்பதே

பாண்டவர்களது விருப்பம். அந்நாடு எவ்வாற்றானும் எதிலார்க்கேற்புடைத்தன்று. ஆயினும், பலசூழ்ச்சிகள் செய்து அதனையும் பறித்துக் கொண்டனர். ஆகவே பாண்டவர்களது தருமபுத்தியும், கௌரவர்களது துன் மதியும், இருதிறத்தார் சுற்றத்தொடர்பும் உள்ளத்தில் வைத்து மேற்செய்யவேண்டுவனவற்றைக் சூழுமியிருக்கும் ஒவ்வொருவரும் கூறுமாறு கேட்டுக் கொள்கின்றேன். பாண்டவர் சான்றாண்மைக்கு விளைநிலமாயிருத்தலினால் அந்தோ! வனவாசமும் பொறுத்தருளினர். மேலும், நூற்றுவர் தீங்கிழைத்தால் கௌரவர் குலத்தை வேருடன் அறுத்து விடுதல் திண்ணமே. எண்ணிக்கையில் பாண்டவர் மிகக்குறைவாயிருப்பதால் கௌரவர்களுடன் போராடின் தோல்வியடைவார்களென்று சிலர் கூறுவர். அது முற்றிலும் பிசகு. போர்நேரத்தில் பாண்டவர் உதவிக்குத்தக்க அரசர்களும் வருவர். துரியோதனனது உட்கருத்து இன்னதென்பது இப்பொழுதறிய வியலாது. ஆகையால், ஆன்றகுடிப்பிறப்பும் வேந்தவாவும் பண்பும் ஆழ்ந்த கல்வியறிவுமுடைய ஓர் தூதனை அத்தினபுரிக்கனுப்பிப் பாதி நாடு தருமபுத்திரனுக்குக் கொடுக்கவேண்டும் என்று வழக்காடுவது தான் எம் கருத்" தென்றார்.

இரண்டாவதாகப் பலதேவர் கூறுகின்றார்:— "அறத்திற்கும் பொருளுக்கும் பொருத்தமான கண்ணனது மொழிகள் உதிட்டிரனுக்கும், துரியோதனனுக்கும் ஒன்று போல் நன்மை விளைவிக்கும் என்பதற்கு ஐயமில்லை. இருதிறத்தாரும் மனஒற்றுமையுடன் நாட்டைப் பங்கிட்டு ஆளுவதாயிருந்தால், அரசனும் குடிகளும் நலம்பெறுவர்.

அன்றியும், குரு பாண்டவர்களது பகை தணிவதும் திண்ணமே. தார்த்தராஷ்டிரர் மறைநூல் உணர்ந்தவர்களும், பலவான்களும், போர்வீரர்களும் ஆவார்கள். முதியோனுகிய பீஷ்மனும், மகானுன விதுரனும், திறமைமிக்க திருதராட்டிரனும், துரோணன் கிருபன் முதலிய ஆசிரிய வீரர்களும், இளைஞனும் அசுவத்தாமனும், காந்தார மன்னனும், இன்னோரன்ன பலரும் இருத்தலால் அவர்கள் குழுமிய அவையின்கண் மிக்க பணிவுடன் வேண்டிக் கொண்டாலன்றி உதிட்டிரன் நோக்கம் வெற்றிபெருது. நூற்றுவர்க்கு வெறுப்பை விளைத்து அன்னூர் கோபத்திற்காளாகலாகாது. என்னையெனில், பலவான் காரியம் வெற்றியாம். சாமோபாயத்தினுல் காரியம் வெற்றிபெறுவதே நலம். சூதாடி நாட்டைப் பணயம் வைத்துத் தோற்றபின் மீண்டும் நாடு வேண்டுமென்று கேட்பது முறையோ? உற்ருர் உறவினர் ஆகிய பலரும் கூடாதென்று மறுத்துரைத்தும் கேளாது சென்று உதிட்டிரன் நாட்டைத் தோற்ருன். அம்மட்டோ? துரியோதனனோடாயினும், கர்ணனோடாயினும், மற்றியாவரோடாயினும் சூதாடியிருந்தால் இத்தகைய தீமை நிகழுமோ? இவர்கள் எல்லோரையும் விட்டுச்சகுனிபாற்சென்று கவருடினன். வஞ்சகனுகிய சகுனி நாட்டைப் பிடுங்கியதில் அவனைக் குறைகூற ஏதுவில்லை. ஆகவே, கை நழுவிப்போன பொருள் திரும்பப் பெறவேண்டுமென்ருல் மிக்கவணக்கத்துடனும், பொறுமையுடனும் மன்ருடிக் கேட்கவேண்டுமேயல்லாது தாய பாகத்தைக் கொடு என்று கண்டிப்பாய்க்கேட்க ஒழுங்கில்லை. துரியோதனனிடம் பரிவுடன் கேட்கும் பொருட்டுத் திறமுடைய தூதர்கள் முயற்சிப்பார்களாக.

சாமோபாயத்தால் எய்தும் பயன் போராலடையும் நன்மையைவிடப் பன்மடங்கு பயனுடைத்து.''

சாத்தகி சீற்றத்துடன் கூறியது:— "மக்கள் ஒவ்வொருவரும் தத்தம் கருத்துக்கியைந்தவாறு பல கூறுவர். இந்நிலவுலகில் பெரும் சூரர்களும் துன்மதியினர்களும் பலர் காணப்படுகின்றனர். ஒவ்வொருவரும் தன்னைப் போன்றவர்க்கே பெருந்துணையாய் நிற்பர். ஒரு மரத்தின்கண், காய் கனிகள் நிறைந்த பல கிளைகளும், ஒரு மலரேனும் இல்லாச் சில கிளைகளும் காணப்படுகின்றன; அவ்வாறு ஒரு மரபிற் சிறந்த வீரர்கள் சிலரும், ஆணும் பெண்ணு மல்லாப் பேடிகள் சிலரும் உளர். ஓ! பலபத்திர வீரனே! தாங்கள் கூறியதைப்பற்றி எமக்குச் சற்றும் பகையில்லை. அதற்குப் பொறுமையுடன் செவி சாய்த்த கழகத்தார் மீது கோபம் தோன்றுகின்றது. அறத்தின் உருவம் போன்ற தருமன் குற்றவாளி யென்று இப்பேரவையின்கண் நீவிர் எங்ஙனம் கூறினீர்; "உறங்குவானை உணர்த்தி ஊனில்லை என்றற்போல" இன்பமாய் அரசாண்டிருந்த உதிட்டிரனை இந்திரப் பிரஸ்தத்தினின்றும் அழைத்து வந்து உடைமையைப் பிடித்துப்பறித்தது சாலுமோ? தருமன் தானகவே சூதாடத் தலைப்பட்டால் தாங்கள் கூறுவது முறையாயிருக்கலாம். தந்திரமாயழைத்துப் பெருஞ்சதிவன்றே செய்தார்கள். ஆயினும், அதற்கும் உடன்பட்டு இட்ட கட்டளைப்படி பதின்மூன்று ஆண்டுகள் துன்பத்துடன் கழித்தார்கள். அந்நாட் செய்த நியதிப்படி பாண்டவர்க்கு நாடு திரும்பக் கிடைப்பதற்கு முழு உரிமையும்

இருக்கவே, துரியோதனனுதியரைத் தொழுது கால் பிடிக்கக் கூறியது தகுதியோ? இது பாண்டவர் உயிருள்ள ளவும் நடவாதென்றுணர்ந்துகொள்க. ஒழுங்கைச் சொல்லி யும் இசையாதிருந்தால் அந்நேரத்திலே கௌரவகுலத்தை வேரறுத்து விடுவேம். நூற்றுவர் நம் காலில் வீழ்ந்து வணங்காவிடின் பகைவர்களுடையவும், அன்னார் துன் மந்திரிகளுடையவும் உயிர் யமபுரிக்கு அனுப்பப்படும் என்பது திண்ணம். அந்தோ! நும் எண்ணம் சென்றவாறு என்கொல்? குருகுலத்தாரை வெல்லமுடியாதென்று தாங்கள் எண்ணினீர் போலும். இது பேதமையினும் பேதமையே. காண்டீவம் எனும் வில்லேந்தின பார்த்தனை வெல்வதற்கு இம் மூவுலகிலும் யாவரேனும் உளரோ? பீமன் கதையை ஒருமுறை யசைத்தால் இம்மண்ணுல கம் தாங்காதன்றே. சாத்தகியான யாம், நகுலசகா தேவர்கள், விராடன், துருபதன், திருஷ்டத்யும்னன் முதலிய வீரர் அனைவரும் ஒருங்கே எதிர்த்தால் அன்னார் நிலைமை என்னும்? யாமனைவரும் உயிருடன் இருக்குமள வும் கன்னன் சகுனி முதலியோர் எம் அருகில் வருவரோ? துணிந்து வரும் பகைவன் யாவனாயினும் அவனைக் கொலைபுரிவது குற்றமன்று. பகைவர் மாட்டுச் சென்றி ரப்பதுபோல் இழிவும், வெட்கமும் வேறில்லை. துரியோ தனனோ போர் புரியாமல் நாட்டைத் தரமாட்டான் என்றறிக. ஆகவே, உதிட்டிரனுக்கு நாடு கிடைக்க வேண்டும் அல்லது நாம் அனைவரும் போர்க்களத்தில் உயிர் துறக்கவேண்டும். இதுவே என் கருத்து என்றான்.

துருபதன் கூற்று:—"சாத்தகி கூறின யாவும் சாலவும் நன்று. இன்சொல்லினால் துரியோதனன் அரசாட்சி யளிக்க மாட்டான். மகனிடத்துள்ள பேரன்பினால் திருதராட்டிரனுக்கு மறுத்துரைக்கவும் இயலாது. அவன் கழகத்தாராகிய பீஷ்மத்துரோணாதியர் உலோப குணத்தாலும், கன்னன் சகுனி முதலியோர் மூர்க்க குணத்தினாலும் துரியோதனனைப்பின் தொடரா நிற்பர். ஆகலால், பலபத்திரனது எண்ணம் எமக்கு உடன்பாடன்று. அரவக்கொடியோனைப் பின்பற்றலாகாது. அவன்பெருந் துஷ்டன்; இன்சொலால் இசைந்து வாரான். அவன்பால் நயமொழிகூறுவதென்றால் நாய்வாலை நிமிர்க்க முயன்றதை யொக்கும். அன்றியும், போருக்கஞ்சி இனியவை கூறியாயினும் காரியம் வெற்றிபெறலாம் என்றெண்ணி வந்ததாய்க்கூறுவது தீயார் இலக்கணமன்றோ? எக்காரியத்திலும் நன்மைதீமைகளை ஆராயும் இயல்பு அன்னார்க்கில்லை. ஆகவே, நம் நண்பர்களிடத்துத் தூதர்களை அனுப்பி உதவி புரியுமாறு உறுதிகேட்க வேண்டும். நால்வகைப்படைகளையும் பெருக்கவேண்டும். துரியோதனன், மன்னர் உதவியைப் பெறுமுன் நாம் விரைவிற் பெற்றுக் கொள்ளுதல் நலம். அன்பும், அறிவும், ஆராய்ந்த சொல் வன்மையுமுடைய உலூகனைத் தூதனுப்புவோம். திருதராட்டிரன், வீடுமன், துரியோதனன், துரோணன் முதலியோர் ஒவ்வொருவரிடத்தும் தெரிவிக்க வேண்டுவனவற்றைச் செம்மையாய்க் கூறியனுப்புதல் முதற்கடைமையாகும்! என்றனன்.

கிழவனாகிய பாஞ்சாலன் மொழிந்ததைத் தழுவி வாசுதேவ குமாரன் விருஷ்ணிசிம்மன் கூறியதாவது:- "துருபதன் கூறியவை மிகப் பொருத்தமாயிருக்கின்றன. அன்னவர் அறிவிலும், ஆண்டிலும் முதிர்ந்தவர். நாமனைவரும் அவரது மாணாக்கருக்கு ஒப்பான இளைஞராவோம். நமக்குப் பாண்டவரும் கௌரவரும் ஒன்று போல் உறவினர் ஆவர். பாஞ்சால மன்னர் கூறியது இருசாரார்க்கும் நன்மையானதே. இருதிறத்தாரும் இணங்கி இருத்தல் எவ்வகையாலும் நன்மைபயக்கும். இதற்கிசையாதிருந்தால் போர்புரியாமலிருக்க வழியில்லை. நாம் அனைவரும் சாதற்கும் உளங்கொண்டு ஈண்டுக்குழுமியதால் நம்எண்ணம் நிறைவேற்றி நாட்டிற்கேகுவோமாக. இறுதியில் போர்தான் செய்யவேண்டும் என்று உறுதியானால் நம்மிடத்திலும் உதவிவேண்ட வருவார்களே. அப்பொழுது முறை செய்வோம்" எனக்கூறிமுடித்தனன். கூட்டம் குலைந்தது. எல்லோரும் தத்தம் நாடடைந்தனர்.



# ஏழாம் அதிகாரம்.



## நட்புற யோசனை.

ஒரு மரபைச்சார்ந்த வகுப்பார் தம்முள் பிணங்கி விட்டால் அவர்களை ஒற்றுமைப் படுத்துவது சுற்றத்தார் கடமையாகும். குருபாண்டவர் வைரம் நாடோறும் வளர்ந்து வளர்ந்து பெரும் போராலன்றித் தீரா நிலைமையி லாகிவிட்டது. இன்னும் ஓர் முறைகூடச் சோதிக்கவேண்டு மென்று இருவர் சுற்றத்தாரும் எண்ணியது தகுதியே. நடுவு நிலைமையாக ஒருவர் பேசத் தலைப்பட்டாலும் விரும்பிய நன்மை விளையாதெனை இருதிறத்தாரும் கருதி னமையால் போரிற்காம் முயற்சிகள் செய்யலாயினர். இருவகுப்பாரும் யாமுன்னே, யாமுன்னே என்று தத்தம் நட்டார்கள்உதவிவேண்டிச்செல்லலாயினர்.பாண்டவர்பாற் சார்ந்த பாஞ்சாலனும் விராட அரசனும் மிக விரை வாய் நால்வகைச் சேனைகளும், போர்க்குரிய படைகளும் ஆயத்தம் செய்தார்கள். துரியோதனனுக்கு அரசாங்கம் இருந்தமையால் வேண்டுவன செய்ய மிகுந்த வசதிகள் இருந்தன. நாடும், நகரமும் இழந்த பாண்டவர்களுக்குத் துருபத விராடர்களது பெருந்துணையில்லாதிருப்பின் பெருந்துன்பம் விளையும். பாண்டவர் உலூகனைத் தூத னுப்பியதின் நோக்கம் ஒற்றுமைப்படுத்துவதற்கல்ல; அவன் அஸ்தினபுரிக்கேகி மீளுவதற்குள் தகுந்த முயற்சிகள் செய்வதற்கே யாம். அன்னார் எண்ணம் எண்ணியவாறே முடிந்தது. உலூகன் திரும்பிவிட்டான். வேண்டுவன

யோசித்து சஞ்சயமுனிவனிடம் கூறியனுப்புவதாய்த் திருதராட்டிரன் மொழிந்ததைப் பாண்டவர்க்குணர்த்தினான். இத்தருணம் துரியோதனன் வாளாவிருக்கவில்லை. ஒரு தொழிலில் துணிந்திறங்கிவிட்டால் அதனை இடையூறின்றி முடிப்பதற்கு வேண்டும் விடாமுயற்சி செய்வது அவன் இயல்பு. பாண்டவரின் பெருமுயற்சியை யறிந்து அன்னான் முன்னினும் பன்மடங்கு முயல்வனாயினன். அவர்களது உறவினனும் சல்லிய மன்னனைத் தந்திரத்தால் தன் வயப்படுத்திக்கொண்டான். கண்ணனது உதவி வேண்டித் துவாரகைக்குச் சென்ற காலையில் அருச்சுனனும் அங்கு சென்றிருந்தது கண்டு மன்னவன் சற்று வாட்ட முற்றனன். இருதிறத்தார்க்கும் உறவினனாகிய கண்ணன் அளவற்ற படைகளைத் துரியோதனனுக்கும், ஒண்டியான தன்னை அருச்சுனனுக்கும் அளித்துவிட்டு இருவரையும் மகிழ்வித்து அனுப்பிவிட்டான் என்க. திருமாலான கண்ணனுக்கு இயற்கையிலேயே பாண்டவர்பாற் றோன்றிய அன்பு இத்தருவாயில் நன்கு வெளியாயிற்று. ஊனக்கண் இல்லாவிடினும் ஞானக்கண்ணுடைய திருதராட்டிரன் மேல்நடைபெறும் பெரும்போரின் முடிவென்னுமென்று ஐயமுற்றனன். தம் புதல்வன் மனோநிலையை நன்கு அறிந்தவனாதலானும், தமக்கு எத்துணை வல்லமையுடைய மகாரதர்கள் உதவி புரிந்தாலும், பெருந்தன்மையும், சாந்தகுணமும், இறைவனருளும் உடைய பாண்டவர்களை வெல்லத்தகுந்த ஆற்றல் நூற்றுவர்க்கு இல்லை என்று திண்ணமாய் உணர்ந்தான். கன்னன் ஒழிய, ஏனை வீரர்கள் துரியோதனன்மாட்டு உள்ளன்பு இல்லாதவர் என்பதும், பாண்டவர்களோ அன்னாரிடத்து

மிகுந்த அன்பும், ஆர்வமும் உடையவர்கள் என்பதும் அவனுக்குத் தெளிவாய் விளங்கிற்று. "பீஷ்மத்துரோணு தியரைப் பாண்டவர்கள் வெல்லார்கள் எனினும் பொருள் ஒன்றையே கைம்மாருகக் கருதிப் போர்புரியும் ஆசிரியர்க்கு முழுஎண்ணத்தோடு எதிர்க்கும் பாண்டவரை வெல்லலாகுமோ வென்பது ஐயுறற்பாலதே. சொல்லளவில் வீரம் காட்டிச் செயலில் ஓட்டம் பிடிக்கும் கர்ணன் ஒருவன் இருப்பதால் சொல்லற்குரிய நன்மை எதுவும் பிறவாது. ஆகவே, தன்வலியும், மாற்ருன் வலியும், துணைவலியும் தூக்கி நோக்குங்கால் பாண்டவர்களை சாமோபாயத்தால் வெல்வதே தகுதியாம்." இவ்வாறெல்லாம் எண்ணிய திருதராட்டிரன் சஞ்சயமுனிவனை அழைத்துத் தம்மக்களைப் பழித்தும், பாண்டவர்களைப் புகழ்ந்தும் வருமாறு கூறினன். "இவ்வரசாட்சி பெருந்துன்பத்திற் கிடமாயிருக்கின்றது; அதன்பால் ஆசையை அறவேஒழித்து வனத்திற்சேகி முன்போல தவம்புரிந்து நூற்றுவர் மேலான வீடடைவார்களாக. அறிவிலிகளும் பேராவுடையோருமாகிய நூற்றுவர் அழிவுறும் இந்நாட்டை அடைந்து வாழ்ந்தால் நமக்கென்ன? நற்குணநற்செய்கை மிக்க எம்மக்கள் பாண்டவர் இதன்பொருட்டு பெருமுயற்சி செய்ய வேண்டாம்." இங்ஙனம் பலநய மொழிகளும் உதிட்டிரனுக் குணர்த்துமாறு தூதனை அனுப்பினன். தன்னலம் கருதிய மனிதர் என்னென்ன பிதற்றல்களெல்லாம் பிதற்றுகின்றனர். இருட்டைக்கொண்டு ஓட்டையை அடைத்து விடலாம் என்ற துணிவு வந்தது தம் மக்களிடத்துத் தோன்றிய அன்பின் மிகுதியன்றோ? பாண்டவர்களுக்குப் பகைவர் உள்ளக்கருத்தையும் பிறர்செய்யும் சூழ்ச்சிகளையும் அறிய முடியாதென்றுன்னிய திருதராட்டிரனது பேதமைக்கு என் சொல்வது? தூதனுக்குத்தன் கடமையைச் செய்ய

வேண்டுவது அவசியம். அந்த பூபதி கூறியவற்றில் வெய்ய சொற்களைவிடுத்து இனிமையான சொல்லை மகிழச் சொல்லியும் தன் கடமையை நிறைவேற்றியுள்ளான்.

சஞ்சயனிடத்தில் தருமதனயன் பலஒழுங்குகளையும் கூறினன். மக்கள் நடுவுநிலைமை பிறழுவாராயின் அஃது அன்னார் மரபினை வழிவழியாக ஈர்வதோர்வாளாகிவிடும்.

† "சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க்கணி"

என்ற அருமைத் திருவாக்கையும் உய்த்துணர்க. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அரசகருமங்களில் என்ன என்ன கடமைகள் புரியவேண்டுமென அறநூற்கள் வரையறுத்துக் கூறுகின்றனவோ அவற்றையே தாம் செய்வரென்றும், தற்பொழுது நாட்டைப்பெறாமல் அடங்கிவிடமனமெழு வில்லை என்றும் மனவருத்தத்துடன் தருமன் தந்தைக்குத் தெரிவிக்கச் சொன்னான். அன்னார் இழைத்த தீங்கனைத்தையும் ஆதிமுதல் 'இறுதிவரை நினைவில்வைத்திருக்கும் தம்பியர்களும், கொடியனும் அரவக்கொடியானைக்கொன்றாலன்றி நாட்டிற்கு நன்மை இல்லையென்றெண்ணிய கண்ணனும் பெருஞ் சீற்றத்துடன் பற்பல கடுஞ் சொற்களையும் சொல்லி விடுத்தனர். எங்ஙனமாயினும், பிணக்கம் அகற்றும் விருப்புடைய தருமன் போரை விரும்பும் இளையோர் மொழிகளையும், கற்புடைய மனைவியின் ஆறாத்துயரத்தையும், எல்லா நன்மைக்கும் நிலைக்களமான கண்ணன் கருத்தினையும் கருதாது குரு நாட்டிற் பாதியாயினும் அல்லது ஐந்து கிராமங்களாயினும் தந்தாலன்றி சந்திக்குடன்படார் எனக்கூறி சஞ்சய முனிவனை வழியனுப்பலானான்.

பாதி நாடல்லது ஐந்து ஊர்களாயினும் போதுமென்ற பாண்டவர்சொற்கள் திருதராட்டிரன் கவலையைக் குறைத்தன. மன்னவன் விரைவாய்த் தன்மகனை அழைத்து வருமாறு கூறினன் "நீ பாண்டவர்களோடு பகைகொள்ளா திருக்கைநன்று. நமக்குப் பெருங்கேடு ஒன்றும் வராது. ஐந்துசிற்றூர்கள் மட்டும் ஐவருக்கும் கொடுக்கவேண்டும். ஒருபெரும் பொய்கையில் நின்றும் பத்துக்குடம் நீர் மொண்டு விட்டால் அதற்குப்பெரும் குறைவு வருமோ? போர் புரிவதென்றால் வில்வீரனும் விசயனையும், தண்டபாணி பீமனையும் வெல்ல யாருளர். மாத்திரையின் மக்களும் திறமையற்றவர்களல்ல. உதிட்டிரனோ அறமே உருவாயமைந்தவன். அவன் மனதில் எதை உன்னுகிறானோ அஃது அப்பொழுதே கைகூடும். துணைவலியும் அவர்களுக்குச் சற்றும் குறைவில்லை. அழிவதும், ஆவதும் ஆராய்வோருக்குப் பாண்டவர்களுடன் போர்செய்யத் தலைப்படுதல் அறிவீனம் என்றே புலப்படும். ஆகையால், பாண்டவர்களுடன் நட்புறுவது நமக்கு நன்மை பயப்பதோடு, அவர்களைச் சாய்ப்பதற்கும் வசதியாகும்." இவ்வாறு பல நியாயங்களையும் கூறித் துரியோதனன் எண்ணத்தை மாற்ற முயன்றனன். மலைநகரினும் நடுங்காப் புதல்வனது திண்ணமான எண்ணத்தை இத்தனை நாட் பழகியும் தந்தையறியாது போய்து வியப்பே. "எந்தையே! பாண்டவர்களுடன் உறவாடிக் காலம் தள்ளுவது என் உயிர் உள்ளளவும் நடவாது. அவர்களோடு புரியும் போரில் நாம் தோற்றுவிடுவோம் எனச் சற்றேனும் கவலையுறவேண்டாம். துரோணன், கிருபன், அசுவத்தாமன், கர்ணன் சல்லியன் முதலிய மகா வீரர்கள் நமக்குத் துணையாய் இருக்குமளவும் இம்மூவுலகில் எவரை நாம் அஞ்சவேண்டும். இவர்களுள் ஒருவரை ஐவராலும் வெல்ல முடியாதன்றே. அங்ஙனமிருக்க இவ்வீரர் அனைவரும்

ஒன்றுசேர்ந்து பெரும் போர் புரிய நேரின் இம்மண்ணுலகம் முடிவதற்குரிய ஊழிக்காலம் வருவது திண்ணம். பீமன் ஆற்றலைப்பற்றி அஞ்சவேண்டாம். யானும் பீமனும் முன்னோர் போர் அரங்கில் வைத்து மற்போர் புரிந்திருக்கின்றோம். இன்னுமொருமுறை அவனுடன் மற்போர் செய்ய ஆவல் கொள்கின்றேன். தண்டாயுதப்போரில் என்னோடு பீமனுக்கு நிற்கமுடியாதென்பது கிருஷ்ணார்ச்சுனர்களும் உணரவில்லை. பின், சேனையின் மிகுதியினாலோ படைத்தலைவர்களின் வல்லமையினாலோ, மற்றெவ்வகை வலியினாலோ நமக்கொப்பாகப் பாண்டவர்களுக்கு நிற்க முடியாது. இதனாலன்றோ பாதி நாடு இல்லையெனினும், ஐந்தூர்களாயினும் கிடைத்தல் நலமெனத் தருமன் கூறியனுப்பினன். எந்தையையும், விதுரனையும் நீங்கலாக ஏனைய வீரர் அனைவரையும், இக்குருமரபினரையும் அறவே அழித்துவிட்டு உதிட்டிரனுக்குமுடிசூட்டுவதாய்க் கூறிய கண்ணனது சொற்கள் ஒருபோதும் நிறைவேறாது. அவர்களே விரைவில் அழிவார்கள்". இவ்வாறு துரியோதனன், தன்வலியும் மாற்றான்வலியும் வகுத்துக்காட்டிச் சிறிதும் அஞ்சவேண்டாம் எனத், தன் தந்தைக்கு உறுதிமொழி கூறினன். என்ன என்ன கூறியும் அவனுள்ளம் தேறவில்லை என்பது பின்னால் விளங்கும். செஞ்சொல் முனி சஞ்சயனைத் தூதனுப்பியது துரியோதனனுக்குப் பகைவர் வலியறிய இடனாயிற்று. மாற்றார் வலியையறிந்திருப்பது போருக்கேற்ற உதவியாயிருக்குமென்பதற்கையமில்லை. இஃதறிந்ததால் நாககேதனனுக்குத் தன் தானையை முன்னுக்குப்பன்மடங்கு மிகுதிப்படுத்த எளிதாயிற்று.

சஞ்சயமுனிவன் கொண்டேகியதூதிற்குத்தக்க மறு மொழி வாராததால் கௌரவர் போர்முயற்சி செய்வதாய் முரசக் கொடியோன் தீர்மானித்தனன். இறுதியாக இன்னம் ஒருமுறை உலகத்தலைவனும் கரியசெயமாலைத் தூதனுப்பத் துணைவருடன் ஆண்டவன் தலைமையில் யோசிக்கலானான்.

கண்ணபிரான் அவையை நோக்கி "நமக்கு நாடு வேண்டுமோ? அல்லது காடு வேண்டுமோ? ஒவ்வொரு வரும் தத்தம் கருத்தை உரைமின்'' என்றனன்.

தருமன் கூற்று:— குரவரையும், கிளைஞரையும் கொல்வது நன்றல்ல. அங்ஙனம் பெற்றுக் கொள்ளும் நாட்டிலும் காடுசெல்லுதல் நலம்.

கண்ணனது மறுப்புரை:— அமருக்கஞ்சிக் காட்டிற் கேகினல் பூதலத்தோர் ஏசுவர். முன்புகன்ற வஞ்சினமும் பொய்த்துவிடும். ஆதலால், இது நீதியல்ல.

தருமதனயன் கூற்று:— நீ தூதுசென்று எம் நினைவு அவர்க்குணர்த்துக. தாயபாகம் தரவில்லை யென்றால் போர் செய்வோம். அதுவசையன்று. பணிக் கொடியோனிடம் புனல் நாடுகேட்க; நாடொன்று நல்கானுகில் ஐந்தூர் வேண்டுக; அவை இல்லை என்றால், ஐந்து இல்லங்கள் வினவுக; அவை மறுத்தால் அடுபோர் என்க; இதுவே எமது வேண்டுகோள்.

பீமன் கூறியது:— அண்ணன் மானமிலாது சொன்ன தற்கு யான் என்சொல்வேன். பைந்தொடியாள் வேத் தவையில் நாணமுற்று முறையிடும் போது எம்மை

வெருளேல் என்று தடுத்தான். இது மரபிற்குத் தீரா வசையாம். அரவுயர்த்தோன் கொடுமையினும் முரசுயர்த்தோன் பொறுமைக்கஞ்சுகின்றேன். நம்மைக்காளை விடுத்த கண்டகனைக் கொன்று நாட்டை இன்றே தருவேன். துழாய்முடியோன் பதம் சிவப்பத் தூது செல்ல வேண்டாம். எல்லாம் நிறைவேற்ற என்னைத் தூதனுப்புக. மாற்றான் கொலைகண்டு மகிழாமல் அவன் குடைக்கீழ் உயிர் வாழ்தல் தகுதியல்ல.

பார்த்தன் புகலல்:— கருணைக் கடலாகிய அண்ணலே! என் கைவாள் மண்ணவரையும் விண்ணவரையும் வெல்லும். திரௌபதியின் மானபங்கத்தைப்பற்றி என் முன்னோன் கூறியது எனக்கும் உடம்பாடே. பொன்னாரும் திகிரியினான் தூது போனாலும், பொறைவேந்தன் புகன்றவெல்லாம் சொன்னாலும் அவன் கேளான். பன்னகத்திற்கு அமிர்தம் அளித்தாலும் விடமாம். உவர்நிலத்தில் நல்வித்திடினும் முளையாதன்றோ?

நகுலன் நவின்றது:— கோவலன் போனாலும் குருநாடு அவன் கொடான். கான்சென்று நம் துணைவர் குறித்த நாட் கழித்து வந்தனர். அவரது நாட்டையன்போடு அளிப்போம் என்று துரியோதனன் கொடுக்கவில்லை. தானே யறியாதவன் பிறர்போய்க் கற்பித்தாலறிவனோ?

சகாதேவன் சொன்னது:—கண்ணபிரானே! உன் மாயை ஒருவருக்கும் தெரியாது; யானறிவேன். திருவுளக் கருத்தெதுவோ அதுவே என் கருத்து.

உடன் கண்ணபிரான் அவனைத் தனி அறையில் அழைத்துச்சென்றார். "ஆண்டவனே! நீ பாரத அமரால் எல்லோரையும் கொன்று பூபாரம் தீர்க்க வந்திருக்கின்றாய். நீதான் மாபாரதப்போர் வாராமற் காக்கக்கூடியவன். கோபாலா! பாரதப்போர் வாராமலிருக்க மிக எளிய வழியொன்றிருக்கின்றது. அதாவது, பாரைக் கன்னன் ஆளவேண்டும். பார்த்தனைக் கொன்று பாஞ்சாலியின் தலையை மொட்டையடிக்கவேண்டும். உன் காலில் தளையிட்டு உன்னையும் யான் கட்டிவிட்டால் மாபாரதப் போரேயில்லை." இவ்வாறு கண்ணனை நோக்கிச் சகாதேவன் மொழிந்து அவனை அன்பினால் கட்டவே, அவனுக்கு வேண்டும் வரங்களை யளித்தனன். கண்ணனும் சாதேவனும் முன்போல் அவையில் தோன்றினர்.

பாஞ்சாலி புகன்றது:— கனகன் தனிமைந்தனுக்கும், மூலப்பேரிட்டழைத்த மும்மத மால் யானைக்கும் உற்ற வேளையில் முன்னின்ற நெடுமாலே! கற்றைக்குழல் பற்றிக் கண்ணிலான் மகன் என் துகிலை உரியும்போது ஐவரும் பார்த்திருந்தனர். கொற்றைத்தனித்திகிரிக் கோவிந்தா! நீயல்லாது என் மானத்தை வேறு யார் காத்தனர். என்னை மன்றிலழைத்து மானமழித்தனர். அவர்பால் ஐந்தூர் பெறவேண்டாம். சபதம் இட்டு அன்றுவிரித்த அருங்கூந்தல் எம் பெருமானே! என்று முடிப்பேன்.

இங்ஙனே புலம்பியழுதனள். இக்கருத்தமைந்த உள்ளமுருகும் பாரதச் செய்யுட்களையும் நோக்குக.

"கற்றைக் குழல் பிடித்துக் கண்ணிலான் பெற்றெடுத்தோன்
பற்றித் துகிலுரியப் பாண்டவரும் பார்த்திருந்தார்
கொற்றைத் தனித்திகிரிக் கோவிந்தா நீயன்றி
யற்றைக்கு யென் மானமார் வேறு காத்தாரே."

"மன்றிலழைத் தெனக்கு மாசளித்த மன்னவன்பாற்
சென்று தமக்கைந்தூர் திறல் வீரர் பெற்றிருந்தால்
அன்று விரித்த வருங்கூந்தல் வல்வினையேன்
என்று முடிப்பதினி யெம்பெருமானென்றழுதாள்"

. சாத்தகியின் கூற்று:— வீமன் கையில் தண்டிருந்தது. விசயன் கையில் தனுவிருந்தது. திரௌபதி அவையில் மாசிருந்ததென இருந்தாள். எல்லோரும் கண்டிருந்தீர்கள். கருதலர்பால் ஊர் வேண்டற்க. நாடுவேண்டும் என்று கேட்பது சராசந்தனுக்கஞ்சி வடமதுரையைக் கைவிட்ட மாதவன் மதியோ அல்லது தருமன் மதியோ அறியேன்.

கண்ணபிரான் இறுதியில் "பாஞ்சாலி! அஞ்சாதே. அத்தினாபுரிக்கு நான் தூது சென்று மீண்டபின் உன் கூந்தலை நானே முடிக்கின்றேன்" என்றனன்.

"தொல்லாண்மைப் பாண்டவர்க்குத்தூதுபோய் மீண்டதற்பி
னல்லாயுன்னைங்கூந்தல் நானேமுடிக்கின்றேன்
எல்லாரும் காண வினி விரிபபதெண்ணரிய
புல்லார் தமந்தப்புரமாதர் பூங்குழலே."

பாண்டவர்களின் மேற்குறித்த கருத்தினால் துரியோதனன் மீது எவ்வளவு பகை உண்டென்றும், அதற்குரிய காரணம் இதுவெனவும் எளிதிலறியலாம். குருகுலத்தார் பகைவேரூன்றிக் காழ்த்துவிட்டது. எவராலும் இதனை மாற்ற வியலாது. பண்பைக் கெடுக்கும் பகையை மக்கள் சிறிதும் கொள்ளற்க.

† "பகையென்னும் பண்பி லதனை யொருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று."

என்றார் திருக்குறளாசிரியர். பேரரசர் இருவர் தங்களில் பகைத்துவிட்டால் எத்துணைத் தீமை பயக்குமென்று

அளவிடற்கரிது. இருவர் நாட்டு மக்களுக்கும் பெருங் கேடு விளையும். ஒருவர்க்கொருவர் போட்டி போட்டு நாட்டைக் கெடுப்பர். தற்கால ரோமைப்போரும் கீழ்நாட்டுப்போரும் இதற்கு ஏற்ற சான்றாகும். சாதாரண உலகமக்கள் ஒருவர்க்கொருவர் பகைத்துப் பெருமன்றங்களில் வழக்காடிப் பொருளையும் உயிரையும் இழக்கின்றனர். பகைமையால் இரவு தூங்காமலும், உணவருந்தாமலும் கவலையில் மூழ்கிப் பல எண்ணி மறு நாள் தீமைசெய்ய முற்படுகின்றனர். அந்தோ! பகையென் னும் பேயே! சாந்திக்கு விளை நிலமாம் எங்கள் பாரத நாட்டைக் கெடுத்துவிட்டனையே. அஹிம்சா தத்துவமே உயிர் எனக் கொண்டவர்; சாந்தமே ஓருருவாய்த் தோன்றியவர்; கோபமும் உலோபமும் கொடிதெனக் கண்டவர்; அறக்கடவுள் தருமமூர்த்தி. அன்னாரிடமும் துரியோதனன் பகைக்க நேர்ந்தது அவன் ஊழ்வலி யல்லது வேறென்னை? இருதிறத்தாரும் பகையென்னும் அரக்கனுக்கு அடிமைப்பட்டுவிட்டனர்.

"கனகமூலம் காமினிமூலம்
கலகம் பலவிதம் உலகில் சுலபம்."

என்றார் வடநூலார்.

பல அரிய பொருள்களையும் விளக்கும் பாரதநூலில் நம்தெய்வகுரு வேதவியாசமுனியரசன் மக்களுக்குள்ளே பகை வரலாகாது என்பதற்கு குருபாண்டவப் பகை வாயிலாய் விளையும் துன்பங்களை எவ்வளவு அழகாய் விளக்குகின்றனர். உலகியல் அறிவும், உயிரியல்ஞானமும், உடையவனருளும் பெறவிரும்பும் ஆண்மக்கள் பெண் மக்கள் ஒவ்வொருவரும் ஐந்தாம் வேதமெனப்படும் பாரதநூலைப் படித்தறியவேண்டும். பாரதம் படித்தவர்

ரகை கொள்ளார். சாந்திஅுடைவர். அது சீரிய உபனிட் தங்களைக்கொண்டது. தருமசாத்திரங்கள் பல அடங்கியது. யுத்தநூல், பொருணூல், அரசியல்நூல், இன்பநூல் யாவும் அதிற் காணலாம். "அறம் பொருளின்பம் வீட்டைதல் நூற்பயனே" என்பதும் காண்க. இவ்வளவு பெரியநூல் உலகில் எதுவுமில்லை. அதனையளித்த முனி யரசன் திருமாலின் அவதாரமென்பர்.

"வினையினீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூலாகும்" (தொல்காப்பியம்)

என்பதும்,

"வியாசாய விஷ்ணு ரூபாய
வியாச ரூபாய விஷ்ணவே
நமோ வைப்பிரம் மதனய
வாவஸிஷ்டாய நமோ நம: (பகவற்கீதை)

என்பதும் முனியரசன் பெருமையை விளக்குகின்றன. வியாசபகவான், துர்வாசமுனிவர் முதலிய பெரியார் சொல்லியும் துரியோதனன் கேளாதிருந்தது அவன் தீய காலமே. துரியோதனுதியரின் வஞ்சனையை எடுத்துக் கூறி தூதுசெல்லலாகாது என்று தருமனன்றி மற்றெல்லோருமே மறுத்துக்கூறினர். கண்ணன் அவர் களுக்குத் தகுந்த பதிலளித்துவிட்டுத் தருமன் கூற்றை மேற்கொண்டும், உலகம் கூறும்பழியை நீக்கும்பொருட்டும், கௌரவர் வலியை அறியும் பொருட்டும் தூதுசெல்லத் தலைப்பட்டனன். அவதார புருடனுகிய கண்ணன் பாண்டவர்க்குப் பெருந்துணையாயிருப்பதால் அவர் களுக்கு எளிதில் வெற்றி கிடைக்குமென்பது திருத ராட்டிரன் எண்ணம். அஸ்திஞபுரிக்குக் கண்ணன் வருவதாயறிந்ததால் பல்வகைப் பொருளைக் கொடுத்தும்,

அரிய விருந்தளித்தும், மிக்க செல்வத்தை ஈந்தும் அவனை ஏமாற்ற எண்ணினன். இவ்வுபாயத்திற்குக் கண்ணன் உடன்படான் என்று விதுரன் விதந்து கூறினன். துரியோதனனும் விதுரனைப் பின்பற்றி வருமாறு பேசினன். "எத்தகைய வெகுமதியும் சிறப்பும் செய்தாலும் அவன் அருச்சுனனுக்கே துணையாவான் என்றறிக. ஆதலால், பொருளை விழலுக்கிறைக்கும் நீர் போலாக்குதல் தகுதியன்று."

தந்தைக்கும், தனயனுக்கும் கொள்கையில் எவ்வளவு வேற்றுமையுண்டென்பது இது காறும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் நன்கறியலாம். ஒருவன் உள்ளொன்றுவைத்துப் புறம்ஒன்று பேசுவான். மற்றவனோ, உள்ளத்திலுள்ளதைப் புறத்தும் காட்டுவான். தந்தைக்குத் தன்னலமே நோக்கமாயினும் பிறர்புகழும் பொருட்டுப் புறமே நல்லான் என நடிப்பான். மகனோ, யார்யார் என்னென்ன சொன்னாலும் தான் நினைத்ததை நிறைவேற்று முறுதியுடையான். எவ்வாற்றானும் பாண்டவரை நசுக்கத் திருதராட்டிரனுக்கு எண்ணமிருந்தாலும் அதனை வெளியிற்காட்டாது இன்சொலால் அவர்களை இன்புறச்செய்வான். இளமைப் பருவமுதற்கொண்டே பெரும்பகையுடைய துரியோதனன் அதனை வெளியிற் காட்டாமலும், தகுந்த இடத்துத் தீங்கிழையாமலும் இருந்ததில்லை. கிழவன் அச்சமுடையோனும், புற்கள் மூடியகிணற்றைப்போல் வஞ்சிப்பவனும், காளையோ, தீரனும் சூரனும் நேரில் தாக்கும் அஞ்சாநெஞ்சமுடையோனும் ஆவார்கள். குருட்டுமன்னன் குறும் வழியிலே செல்வான். மகன்நேர்வழியிலன்றிச் செல்லான். "உறவு போலிருந்து குளவிபோற் கொட்டுவான்" என்னும் பழமொழிபோல் திருதராட்டிரன் முகநகநட்டுப் புறம்

தழுவிக்கழுத்தைஅறுக்கும் இயல்பினன். மகன் முறையாகப் போருக்கு அழைத்து வாளால் வீசுவான். கண்ணனுக்குக் கைக்கூலி கொடுத்தும், புகழுரை பேசியும், பொருளளித்தும் தன்வயமாக்கத் தந்தை முயன்றனன். ஆனல், மைந்தன் அரசர் முன்னிலையில் அவனைப்பிடித்துக் கட்டத்துணிந்தனன் என்றறிக. இதனலன்றோ,

"வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு"

என்றும்,

"முகத்தி னினிய நகாஅ வகத்தின்னு
வஞ்சரை அஞ்சப் படும்"

என்றும், திருதராட்டிரனைப் போன்றவரொடு உறவு கொள்ளலாகாது என அற நூலும் விலக்கிற்று.

தந்தைக்கும் மகனுக்கும் அமைந்த உள்ளநிலையை ஆயுங்கால் துரியோதனனை மிகவும் மெச்சியே கூறவேண்டும். என்றாலும், அவனது தீரம் சுற்றத்தார்க்குத் தீங்கிழைப்பதில் செல்லாதிருக்குமேல், அவனை யாவரும் புகழ்ந்துகொண்டாடுவர்.

தருமதனயனது வேண்டுகோளுக்கிணங்கித் தூது செல்லத்தலைப்பட்ட கண்ணபிரான் வழியில் ஓர் நாள் தங்கினன். பின் பாண்டவர் நேசன் கேசவன் வந்து சோலையில் தங்குவதை ஒற்றர் வாயிலாய் அறிந்த உரக கேதனன் ஆணைப்படி நகர் முழுவதும் எழுநூறு யோசனைத்தூரம் நகரமாந்தர் நன்றாய் அலங்கரித்தனர். பல்லியங்களும் முழங்கின. மன்னர் மன்னன் மாலெதிர் கொள்வான் எழுந்தனன். அதனைக் கண்ணுற்ற சகுனி மருகனை நோக்கி "நீயவனை எதிரேற்பது முறையோ?

அவன் ஓர் சிற்றரசனன்றோ?" எனத்தடுத்தான். துரியோதனன் சிறிது மனம் திரும்பி நல்வழியில் வந்தாலும், அடுத்திருக்கும் துன்மந்திரிமார் நன்மனதை மாற்றிவிடுவர். திருமாலுக்குக் கோயிலும் காட்சியும் அமைத்தது போற்றத்தக்கதே.

அவ்வாறே, இராவணன் முதனாட்போரில் இராமனோடு போராடித் தோற்று வெட்கமுற்று தன் பாட்டன் மாலியவானோடு வருமாறு வருந்திக் கூறினன். "காமனிலும் சிறந்த இராமனைக்கண்ட சீதை எம்மனோரை நாயென எண்ணுவது இயல்பே; என் தீயகாலத்திற்கு ஏற்ப நல்ல பகையும் கொண்டேன்" என்றான். "நாசம் வந்துற்ற போது நல்லதோர் பகையைப்பெற்றேன்." இது கம்பர் மொழி. இங்ஙனம் வருந்திக் கூறியதைக் கேட்ட மகோதரன் என்னும் மந்திரி, "அரசே! அஞ்சாநெஞ்சம் பெற்றதேவரீர்! இராமன் பெருமை சாற்றல் தகுமோ? நம் பகைவர் நகைப்பர்" என நேர்வழியிற் சென்ற மனதைத் திருப்பிவிட்டான் என்க.

மாதவன் நால்வகைப் படையோடும் அத்தினபுரத்தையடைந்து, குந்திதேவியின் இல்லிற்சேகி, மக்கள் நிலைமையும் மற்றுமுள்ள புதுமைகளும் கூறி, அவள் மனச்சோர்வு மாற்றினன்.

துரியோதனன் தூதனுக்கு முகமன்கூறி விருந்திற்கழைக்கவே, வந்த காரியம் நிறைவேற்றித்தரல் வேண்டுமென்று கஞ்சநாபன் கழறிவிட்டு, மெய்யன்பனும் விதுரனில்லில் தங்கினன்.

தூது செல்லல் எளிதல்ல. தூதனைச்சந்தி விக்கிரகங்கட்கு வேற்றரசனிடம் அனுப்புவார்கள். தூதராயினர்

'தான் எடுத்துக் கூறுவான்' எனவும், 'கூறியது கூறுவான்' எனவும் இருவகைப்படுவர். அவருள் முன்னோன் அமைச்சனோடொப்பாவான். பின்னோன் அவனினுங் காற் கூறு குணம் குறைந்தவனும் ஆவான். தூதுவனுக்கு நற்குடிப் பிறப்பும், சொல்வன்மையும், தம்மரசர் மாட்டு அன்பு உடைமையும், நீதிநூற்றிறமையும், அஞ்சா நெஞ்சமும் அமையவேண்டும். அன்றியும், தம்முயிர்க்கு இறுதிவரினும் தம்மிறைவனுக்கு உறுதிபயக்கும் நல்லுரை கூறுபவனே சிறப்புடையோன் என்பர். கண்ணபிரான் இவ்விலக்கணம் அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்றவன். இடத்திற்கேற்றவாறு நயந்தும், சினந்தும், பணிந்தும் கூறுவதற்குக் கண்ணனாலன்றி வேறு யாவராலு மியலாது. இத்துணைத் திறமை வாய்ந்த ஒருவன் சந்தி பேசியும், இசையாத துரியோதனனது ஊழின்வலியும், மனதின் திட்பமும் நன்கு விளங்குகின்றன.

மக்கள் துயரம் அகற்றவந்த கண்ணபிரான் பாண்டவருக்குத் தூது வந்த செய்தியைச் செவியுற்ற நகரமாந்தர் அனைவரும் பெருங்களிப்புடன் ஆண்டு குழுமினர்.

* "சங்கு மணிமுரசுஞ் சல்லரியுந் தாரைகளும்
எங்கு முழங்க எழில் வெண்குடை நிழற்றப்
பொங்கு கவரி புடையிரட்ட வெண்ணிலா
வங்க மொரு நான்கும் அவனிபரும் தற்சூழ."

எனப் பலவித உபசாரத்தோடு கமலக் கண்ணனை எதிரேற்றனர். கண்ணன் நிகழ்த்திய சொற்பொழிவின்

அருமையையுன்னி அனைவரும் களிப்படைந்தனர். பெரு வேனிலின் கடுமையால் மழை இல்லாது வருந்தின உயிர் வகைகள் கார்மேகம் கண்டகாலத்து அடையும் களிப்பே போல், கரிய செம்மலாய காந்தற்கடவுளைக் கண்ட பொழுது அவன் அடியார்கள் பெருமகிழ்வடைந்தார்கள். ஐயன் அரசவைக்குச் சென்றதும், அப்பொழுது நடை பெற்ற விமரிசைகள், கழிந்த தில்லி தர்ப்பார் பார்க்கச் சென்றோர் ஒருவாறு ஊகித்துக் கொள்வர். 'தில்லி நகரம் பழைய இந்திரப்பிரஸ்தம் என்றறிந்தால், அதில் மன்னர் குழாம் குழுமியதின் தோற்றத்தை அறிதல் எளிது.

கண்ணன் எழுந்து வருமாறு இயம்பினன். "மாண்பு மிக்க அவையோர்காள்! அனைவருக்கும் வணக்கம். குரு மரபின் பெருமை யாவராலும் புகழத்தக்கது. இம் மரபிலுதித்த சந்தனு, பாண்டு முதலியோர் எத்தகைய ஆற்றலுடையவர். சிறபபுறும் அக்குலத்தில் தோன்றிய குருபாண்டவர் தீராப்பகையும், ஆறாச்சினமும் உடைய ராயிருத்தல் அழகாமோ? சுயோதன மன்னனே! நின் துணைவர் சூதினாலரசிழந்தனர். நீ சொன்ன சொற்படி வழுவாது பதின்மூன்றாண்டுகளும் நொந்து கழித்தனர். குறித்த நாள் முடிந்து வந்ததால் கோதிலா அரசே! அவர் உரிமை நண்பொடு கொடுத்தருள்க". இதனைக்கேட்டு காந்தாரி மைந்தன் கடுஞ்சீற்றம் கொள்ளவே, தாமோ தரன் "பார் முழுதும் வழங்க மனம் இன்றெனில் அவனி பாதியாயினும் வழங்குவாய்! அதுவும் முடியாதெனில், ஐந்தூராயினும் வழங்குக" என்றான்.

உரகத்துவசன் அனைத்தும் மறுத்து கருடத்துவசனை நோக்கி, "நீ வெறுத்தாலென்ன? மன்னவர் திகைத்துப் பல நினைக்கிலென்ன? வெளியிற் சென்று நகைத்தாலென்? உண்மைமொழி பொய்த்ததென்று அமரர் புகன்றாலென்? ஐவர் எம்மொடு வெஞ்சமர் விளைக்கிலென்? ஈயிருக்குமிட மெனினும் யானவர்க்குக்கொடேன்" என்றான்.

"துளபமாலையாய்! ஐவரது நாடளிக்கவும், நகரளிக்கவும் வேண்டுமோ? காடளித்தபொழுதும் அலைந்து திரிந்த அவர்கட்கு ஓர் வீடளிக்கினும் வெறுப்பரோ? ஆதலால், இக்கூற்றைவிடுக".

விண்டுவின் எதிர்ப்புரை:— "தந்தையின் விருப்பத்திற் கிணங்கி தனக்குரிய நாட்டை இளைய தாய் பயந்த இரு தம்பியர்க்கு மளித்த தன்னலமற்ற தியாகமூர்த்தியாம் வீடுமன் இங்கிருப்பதும் நீ யறியாயோ? நும் சிறிய தந்தை மக்களுக்கு ஐந்துநகரமேனும் அளியா நின்னரசியல் என்னே! என்னே! ஒரு குலத்திற்பிறந்த இருசகோதரர் மக்கள் உரிமையெய்தினல் ஒத்து வாழுதல் எக்குலத்திலும் இயற்கையே. ஆனல், குருகுலத்தார் இயல்பு மிகவும் நன்று! நன்று!"

உரகத்துவசன் தாக்குரை:— விழித்தீயெனும்படிச் செயிர்த்து "நாடு வீரருக்கேயன்றி கோழைகளுக்கல்ல. அவர் உரிமை ஏனளிக்கவேண்டும்?" என்றான்.

கோவலன் கூற்று:— "ஐவர் அரசும் கொடாமல் அடலாண்மை பேசினல், குருநிலத்தில் வந்து போராடுவோம்" எனக்கையடித்துக் "கொடுப்பாயாக"வென்றான்

துரியோதனன் மறுப்புரை:— "இழிபிறப்பையுடைய ஆயருடன் காட்டில் பசுக்கூட்டங்களை மேய்த்த உன்

இயல்பையும், ஆய்ச்சியர் உன்னை உரலோடு கட்டிவைத்த அவமானத்தையும் மறந்து, அரசகுலத்திற் சிறந்த குரு குலத்தாரது வாய்மையும் குற்றமில்லா என்பிறப்பையும் உணராமல், இச்சபையில் இவ்வாசகம் இயம்பினை. மத யானைகள் பகையால் நெருங்கிப்போர் செய்ய வந்த போது சிங்கம் போர் புரிய அஞ்சுமோ? அவ்வாறே, ஐவர் வரின் யான் அயர்ந்திரேன். பஞ்சவர்க்குரியானை எம்பி துகிலுரிந்த போது அருகிருந்து கண்டவர் அல்லரோ? சோற்றுப் பாண்டங்களனை அவர்கட்கு மானமேது? அன்னைமார் இருவராம். தந்தையர் ஐவராம். சட்டப்படி எவ்வாறு குருகுலத்துரிமை பெறுவர்? ஓர் பெண்ணை ஐவரும் தனித்தனி விரும்புவராம். என்னை அவரோடு ஒரு குலத்தவனென்று எங்ஙனம் கூறலாம்? அன்று சூதாடி உரிமையாவும் இழந்து போயினர். இப்பொழுது நீ சூழ்ச்சி செய்து நாட்டை மீண்டும் கேட்டால் யான் எங்ஙனம் அளிப்பேன்''?

தாமோதரனைப் பின்பற்றி ஜமதக்கினி, கண்ணுவன் ஆகிய முனிவர்களும் அவையோர் பலரும் பேசினர். அவற்றைச் சற்றேனும் பொருட்படுத்தவில்லை. வான ளாவிய இமயமலையும் ஒருக்கால் பாரினதிர்ச்சியால் இளகலாம். துரியோதனன் மனமோ எள்ளளவும் இளகவில்லை. இப்பெரியார்கள் கூறியும் கலங்காத அவனது மனத்திட்பம் என்னே! என்னே!

இவர்கள் கூற்றைக் கேள்வியுற்ற துரியோதனன் "ஓ! கண்ணா! நடுவு நிலைமை உனக்குச்சற்றேனும் இல்லை. அன்று தொட்டு இன்றளவும் பாண்டவர்க்குத் துணைவன் ஆனாய். மன்றோரம் சொன்னார் பெருநரகடைவார் என்பது நீயறியாய் போலும். எம்மிடம் தோன்றிய பகை உனக்கு இன்று நேற்று முளைத்ததல்ல. யாம் செய்வன

யாவும் தப்பென்றும், அவர்கள் செய்வன அனைத்தும் சரியென்றுங் காட்டிய உன்னோடு எம் குரவர்களும் சார்ந்து கொண்டார்கள். "வேண்டாப் பெண்டாட்டியின் கை பட்டாற் குற்றம் கால் பட்டாற் குற்றம்" என்பது போல அன்பில்லாதவர் புரிந்தனயாவும் குற்றமாகவே தோன்றும். தாங்கள் அனைவரும் மறுத்துக்கூற நான் செய்த கொடுமை என்ன? யான் நன்றாய் ஊன்றிநோக்கியும் புலப்படவில்லையே. வேடிக்கையாய்ப் பாண்டவர் வந்து சூதாடினர். அதில் நாடு நகரமனைத்தும் உண்மையாகவே தோற்றனர். அவர்கள் வென்ற நாட்டைக் கொடாமலும் இருக்கவில்லை. மீண்டும் சூதாடி முழுதும் தோற்றதற்கு யான் என்செய்வேன். சூதாடுவதற்கும், நாட்டைத் தோற்பதற்கும் யான் கூறவில்லையே. யான் இழைத்த தீங்கு எதுவும் இல்லை. என்றாலும், அவர்கள் எங்களைக் கொன்று நாட்டைப் பிடுங்கும் பொருட்டு பெரும் போர் புரிய விடாமுயற்சி செய்கின்றனர். அதற்கு யாதேனும காரணம் வேண்டுமெனக் காத்திருக்கின்றனர். பாண்டவரை வெல்வதற்கு இப் மண்ணுலகில் ஒருவருமில்லை என்று புகழ்ந்து கூறினால் கௌரவர் அஞ்சி நாட்டை அளித்துவிடுவார்கள் என்று எண்ணினையோ? இவ் வெண்ணத்தை விட்டுவிடுக. ஆண்மை அனைத்தும் அமரில் காட்டுவீராக. காலில் விழுந்து தொழுவதோ, நேரிற் சென்று எதிர்ப்பதோ அரசர் கடமை? மன்னர்க்குரிய நெறியினின்றும் அணுவளவும் பிறழ என் மனம் எழாது. வலியின் நிலைமையை நோக்கினால், பாண்டவர்க்கு என்னோடு எதிர்க்க இயலாதென்றறிக. அன்றேல், ஐவர் வென்றால் யாம் வீரசுவர்க்கம் எய்துவோம். அவர்கள் தோல்வியுற்றால் நாடு எம்மைச் சாரும். எவ்வாற்றானும் யாம் பெறுவது நலமே. யான் இளமையாய் இருந்த

காலத்து எந்தை ஆராயாது பாண்டவர்க்கு அளித்த நாட்டை மீண்டெடுத்தேன். இனி என் உயிர் இருக்கு மளவும் ஊசி குத்தும் இடமும் கொடேன் என்பது திண்ணம்''.

இதனைச் செவிமடுத்த மாயோன் துரியோதனுதியரை மிகப்பழித்துக் கூறினன். துரியோதனன் கடுஞ்சினத் தோடு அவைக்களம் விட்டு அரண்மனை ஏகினன். அவன் அன்னை காந்தாரியும் மகனிடம் பொறுமையாயிருக்கக் கூறினள். அவன் கழகத்தார் பலர் கூறியும் அரவக்கொடி யோன் மனம்திரும்பவில்லை. மூர்க்கனும், முதலையும் கொண் டது விடா என்பதுபோல், அவனது பிடிவாத குணத்தைப் பொல்லார் இலக்கணம் என வேதவியாசர் கூறியது யுக்திக்குப் பொருத்தமல்ல. வாசுதேவன் பாண்டவரைச் சார்ந்தவன் என்பது வெள்ளிடைமலை. சக்கரவர்த்தி தன் மகன் நன்மையைக் கருதுபவன் ஆயினும், கழகத்தார் கூற்றை மறுத்துரைக்க இயலாது வருந்தினன். வீடுமன், துரோணன் முதலியோர் கௌரவர்க்குத் துணைவர் என நடித்தாலும் உண்மையில் பாண்டவர்பால் நேயம்மிக்கவர் என்பதும் பற்பல காலங்களில் வெளியாயிற்று. விதுரன் பாண்டவர்க்கு உண்மை நண்பன் என்பது கூறவேண்டுவ தில்லை. நன்மொழி கூறும் குரவர் அனைவரும் பகை வருக்குத் துணையாய் நின்றால் துரியோதனன் அவர்கள் கூற்றை மேற்கொண்டு எங்ஙனம் ஆதரிப்பான்? நெடு நாளாய் வளர்ந்தோங்கிய பகையை, மாற்றார் துணைவர் என்றெண்ணப்படுவோர் கூறியதைக் கேட்டு திட்ப அறிவு இயற்கையிலேயே அமையப்பெற்ற சுயோதனன் நீக்கவில்லையென்று அவனைக் குறைகூறல் தகுதியன்று. அன்றியும், கண்ணன் மொழியைக்கேட்டு நாட்டை அளித்து விட்டால் துரியோதனனது ஏழை மதியை

யாவரும் இகழ்ந்தே கூறுவர். முதலில் வீரவாதம் பேசியவர் போரடுத்த பொழுது பின் வாங்குவது அழகாமோ? வீரம்பேசிய பின் முரண்பட்ட செய்கை காட்டிய உத்தரனது நிலைமையைப்பற்றிய நம் கருத்து இதற்குப்போதிய சான்றும். ஆற்றொழுக்கிற்கிணைந்த வாறு சாய்கிற ஆற்று வஞ்சிக்கொடியின் தன்மைபோல் மாறுபடுதல் மன்னர்க்குரித்தாமோ? இவ்வுலகில் ஊக்கத்துடனும், உறுதியுடனும் முயலுவோர் எக்காரியத்தையும் எளிதில் இயற்றுவர். உலைவிலா ஊக்கமுடையான் மாட்டு ஆக்கம் அதர்வினாய்ச்செல்லும். அன்றியும்,

† "வெள்ளத் தனைய மலர் நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு"

என்றார் பெரியாரும். ஓந்தியின் நிறம்போல அடிக்கடி மாறுபடும் மனமுடையோர் பிறரால் நன்மதிப்படையார். ஆகையால், "போர் புரிந்தாலன்றி நாட்டை அளியேன்" என்றது அவன் குணநிலையைக் காட்டாது ஆண்மையைக் காட்டிற்று. ஆலமுண்ட அவிர்சடைக் கடவுளிடத்தும் 'முக்கண்பார்க்கினும் குற்றம் குற்றமே' ஞானப்புலவர் திலகர் நக்கீரர் மொழிந்ததுணர்க. ஆண்டவன் விசுவரூபத்தைக் காட்டியும் சுயோதனன் அஞ்சி அயர்ந்திலன்; நெஞ்சுபெயர்ந்திலன்; மார்பிலும் சென்னியிலும் கரம் வைத்திலன்; வெறும்புகழ் சிறிதும் ஒழிந்திலனே. சற்றும் மனம் சலியாதிருந்த தன்மையை நோக்குவீராக.



# எட்டாம் அதிகாரம்.



## பாரதப் போர்.

தூந்தி நடை பெற்றமையால் இருசாராரும் போருக்கு வேண்டும் முயற்சிகள் செய்தனர். மிக்க பரப்பமைந்த குரு நிலத்தில் நூற்றுவர் குடதிசையிலும், ஐவர் குண திசையிலும் கோட்டை கொத்தளங்கள் அமைத்தனர். போர் வீரர்களையும், உணவுப் பொருளையும், பீரங்கி முதலிய போர்க்கருவிகளையும் கணப்பொழுதில் குறித்த விடத்தில் கொண்டுவருவதற்குரிய மிக்க வசதியுள்ள இக்காலத்தும் போருக்கு ஆயத்தம் செய்வது எளிதல்ல வென்பது இராணுவ இலாகா அதிகாரிகள் நன்கறிவார்கள். படையாளிகள் பல்லாயிரவர் ஒன்றுசேர்ந்து வழிநடந்தால் பல நகரங்கள் பாழாகி விடும். இது, கழிந்த ஆங்கிலோ ஜர்மன் யுத்தத்தால் நன்கறியலாம். தற்காலத்தில் குண்டுகளும், பீரங்கிகளும், டாங்குகளும், ஆவி வண்டிகளும், சுப்மரையின்களும், காந்தக்கண்ணிகளும், வெடி விமானங்களும், நாவாய்களும், டார்பிடோக்களும் புது மாதிரியாய்த் தோன்றிவிட்டன. போர் முறைகளும் பண்டைக்காலத்தினின்றும் மாறுபட்டன. முன்னாளில் கரி, பரி, தேர், காலாள் ஆகிய நால்வகைப் படைகளும் இருந்தன.

> "சூலமே கணிச்சி தண்டம் தோமரம் குலிசம்சர்பம்
> கோலவாள் பலகை வட்டம் குந்தம் வேல் நாஞ்சில்பிண்டி
> பாலமே முசுண்டி சங்கம் பரிதியே எழுவே தட்டி
> பீலிவன் முசல மாதி பெரும்படை கொண்டுசென்றார்"
>
> (ஸ்கந்தபுராணம்)

மேற்குறித்தபடைகளும் வழங்கிவந்தனர். அம்பெய் தல், உடற்பயிற்சி, மற்போர், தெய்வக்கணைப்பேறு, பகைவர் உயிர்நிலையறிதல் முதலிய வித்தைகளிலும் தேர்ச்சிபெற வேண்டும். ஓர் வீரன், வாள், சிலை முதலிய படைக்கலங்களைக்கொண்டு போர் செய்தால் எதிரியும் அவைகளைக்கொண்டு போராடுதல் முறை. படைகளுக்குத் தலைவன் உளன். அவன் சொல்லை யாவரும் பின்பற்ற வேண்டும்.

"நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்க ளில்வழி யில்."

எனும் திருக்குறளாலறிக.

பகைவர் மேற்படையெடுத்துச் செல்வோர்க்கும், அவரை எதிர்ப்போர்க்கும் அரண் இன்றியமையாதது. நீரரண், மலையரண், காட்டரண் என இயற்கையும் செயற்கையுமாய நான்கரணும் சூழப்படுவது அரணென்ப. உயர்வு, அகலம், திண்மை, பொறிகளால் அணுகுதற்கருமை ஆகிய இயல்பமைந்த மதில்கள் வேண்டும். இந்நாளில் வானவூர்திகளிற் செல்வோர் இம் மதில்களை எளிதில் தாண்டுவர். கோட்டைகள் தாக்கு மிடம் சிறிதாகவும், பரந்தவிடம் உடையதாகவும், பகைவர் மனவெழுச்சியை அழிப்பதாகவும், எல்லாப் பொருள்கள் உடையதாகவும் அமைதல் நலம். கோட்டையைச் சுற்றி அகழும் காணப்படும். இக்காலத்தில் பீரங்கிகள் பலவும், விமானங்களை யழிக்கும் பொறிகள் பலவும் அரண்களில் அமைக்கின்றனர். உறுதியான அரண்கள் பண்டை நாளில் எங்காட்டிலும் விளங்கின. இந்திரப்பிரஸ்தம், அத்தி னபுரிகளில் நல்லரண்கள் இருந்தன. குருநிலத்தில் போருக் குரிய வரண்களும் விரைவில் அமைக்கப்பட்டன.

பார்தப்போர் காணப் பல்லாயிரமக்கள் போர்க்களத்தில் குழுமினர். அவர்கட்கு ஏற்ற இடங்களும் அமைக்கப்பட்டிருந்தன.

பாரதமக்கள் போர்வலி உடையவர் என்பது இராமாயணம், பாரதம், ஸ்கந்தபுராணம், தொல்காப்பியம், புறநானூறு முதலிய நூற்களால் நன்கறியலாம். பண்டைக் கால வீரர்களின் பெருமை வியக்கத்தக்கது. எமன் எதிர்த்துவரினும் 'மனமொத்துப் போர்புரிவர். யானை வந்து எதிர்க்க ஓர் வீரன் தன் கையிலிருக்கும் வேலை அதன்மேல் எறிந்துவிட்டான். நிகழ்ந்த போரில் இவனுடம்பில் வேல் குத்தியிருந்ததை யறியவில்லை. பின் ஓர் வீரன் வந்து இவனை யெதிர்க்கவே, கையிற் படையில்லை யென வருந்தித் தன்னுடம்பை நோக்கினன். உடலில் அயில் தாக்கியிருப்பதைக் கண்ணுற்று மகிழ்ந்து அதனை யெடுத்துப் பகைவன்மீது எறிந்தான்' என்ப. வீரர்கள் விழுப்புண்படாத நாளையெல்லாம் பயனற்ற நாட்களாய் எண்ணுவர் போலும். வீரர் தமக்குத் தோற்றோடுவார் முதுகுப்புறத்து வாளோச்சாத மிக்க மறப் பண்பினை உடையராயிருந்தனர்.

"அழிகுநர் புறக்கடை அயில் வாளோச்சாக்
கழிதறுகண்மை காதலித்துரைத்தன்று"

என்றார் ஐயனாரிதனார்.

இராம இராவணப்போர் முடிந்தபின் நிகழ்ந்த பெருஞ்சண்டை பாரதயுத்தமாகும். போர் நடைபெறும் பொழுது நம் கதைத்தலைவன் காண்பித்த திறமைகள் பல. தானை தங்க நல்லிடங்களும், உணவுப்பொருள்களின்

மிகுதியும் அத்தினாபுரியிலும் சிறப்பாகக் காணப்பட்டன. பன்னிரண்டு அக்குரோணிக்குப் போதுமான உணவு ஆயத்தமாயிருந்ததென்றால் அரசன் முயற்சி எத் தன்மைத்தென்றுணர்ந்து கொள்க. துரோணன், கிருபன், சல்லியன் முதலியோர் கருத்திற்கேற்ப வயது முதிர்ந்த வீடுமனைத் தானைத் தலைவனாக்கினான். கௌரவச்சேனைக்குத் தலைவனாகக் காங்கேயன் வந்தவுடன் மகாரதப்பட்டம் தனக்குக் கிடைக்காமையால் மனம் மாழ்கி, இவன் தலைவனாயிருக்குமளவும் போர் புரியேன்' எனக்கர்ணன் தலைநகருக்கு மீண்டனன். இவ்வழக்கில் வாளாவிருந்த துரியோதனன் நிலை போற்றற்குரியது.

பாண்டவர்களும் சேனைசேர்ப்பதிற் சற்றும் தாழ் வடையவில்லை. கண்ணனுடையவும், பார்த்தனுடையவும் பேருதவியால் தருமனும் பெருஞ்சேனை திரட்டிவிட்டான். திருட்டத்துய்மனுக்குத் தானைத்தலைமைப்பட்டம் அளிக்கப் பட்டது. பாண்டவருக்கு ஏழு அக்குரோணி என்றாலும், மாற்றார் படைகளைவிட மனவொற்றுமையும், இயற்கை வன்மையும் உடையனவாயிருந்தன..

இருசாராரும் படைதிரட்டிய பின் துரியோதனன் உலூகனையனுப்பிப் பூனைவிரதம் எடுப்பது போலிராது "அரசர்க்குரிய ஆண்மையோடு போராடி நாட்டைத் தேடுவாய் என உதிட்டிரனிடத்துக் கூறுக" என்றனன். "எம்மிடம் தூதனாய் வந்து இந்திரஜாலம், மாயவித்தை, நயவஞ்சனை, பேதோபாயம் முதலியன காட்டியது போல் அல்ல போர் புரிதல் என்றும், கௌரவரைக் கொன்று பாண்டவர்க்கு முடிசூட்டுவேன் என்னும் வீரமொழி நிறைவேற்று மாற்றலுண்டெனில், இப்பொழுது காட்டுக

என்றும், கண்ணனிடம் கழறுக. நாயைப்போல் வயிற்றை நிரப்பி விராடன் அரண்மனையில் மடைத்தொழில் புரிந்தமைபோல் அல்ல போர்புரிவது எனவும், அரச அவையின்கண் வைத்துத் துச்சாதனன் உதிரம் அருந்துவேன் என்ற கடுஞ்சினம் முடிக்கத்திறமை உளதெனிற் காட்டும்படி வீமனிடமும் கூறுக" என்று சொல்லியனுப்பினன். இங்ஙனம் செய்தது அகந்தையின் மிகுதியென்று வேதவியாசர் கூறியது உண்மையேயாயினும், உள்ளத்தில் உள்ளதை ஒளிக்காமல் எதிரிலுரைக்கும் சுயோதனனது நேராண்மையைப்புகழாதிருக்க வழியில்லை. முன்பலகாலும் தோல்வியுற்றாலும், வீரத்துடன் வெற்றிபெற முயன்ற சுயோதனனது ஆண்மையும், வீரமும் மெச்சத்தக்கன.

உதிட்டிரனது வணக்கத்தால் சுயோதனன் வீரம் முன்னுக் கிருமடங்கு விளங்கிற்று. போரைக்காணும் பொருட்டு பல்லாயிரம் மக்கள் திரள் திரளாக வந்து குழுமினர். நால்வகைப்படைகளும் முன் வந்து நின்றன. இருசாரார் போர் வீரர்களும் வரிசை வரிசையாய் நின்றனர். அப்பொழுது தருமமூர்த்தி தேரினின்றும் இறங்கிக் கஞ்சுகம் முதலியன கழற்றிவிட்டு ஒண்டியாய்க் கௌரவர் சேனையைத்தாண்டி குரவர்களான வீடுமன், துரோணன், கிருபன் முதலியோர் திருவடிகளில் வீழ்ந்து தொழுது போர்புரிய அனுமதி பெற்றதை நோக்கிப், பெருநகைப் புடன் கை கொட்டிக்களித்த கௌரவச் சேனைகளின் செய்கையை என்னென்று கூறுவோம். வரபலமுடைய ஆசிரியர்களை வெல்வதற்கு இந்திரனுக்கும், உபேந்திரனுக்கும் இயலாதென்பது திண்ணம். அவர்களது உள்ளுதவி இல்லாதிருப்பின், பாண்டவர்களுக்குக்

கன்னிலும் வெற்றி கிடையாது. பாண்டவருள் வீரனும் பார்த்தனுக்கும் பகைவர் படையைக்கண்ணுற்ற பொழுது தோன்றிய மனக்கலக்கம் நீக்கக் கரியசெம்மல் உபனிடத சாரமான பகவற்கீதையை உபதேசித்ததோடு விசுவரூபமும் காட்டவேண்டுவதாயிற்று. ஆகவே, கௌரவ தானையின் பெருமையும், அச்சேனைத் தலைவரின் சிறப்பையும் ஒருவாறுணர்ந்து கொள்க.

பாரதப்போரை மிகவிரிவாய் எழுத பராசரர் புதல்வன் முனிவர்பெருமான் வேதவியாசர் போன்ற பெரியோர்க்கல்லது, ஏனையோர்க்கியலாது. போர் புரியும் நன்னாள் சோதிடரிடம் கேட்டு, காளிதேவிக்குக் களப்பலியூட்டி, நல்லோரையிற் போர் தொடங்கினர். யுத்தப்பேரொலி பெருமிதமாயிருந்தது. எழுவகைப் பிரிவினையுடைய படைவகுப்பின்படிப் போர் வீரர்களை நிறுத்தியதும், படைக்கலப்பயிற்சியில் இருவகுப்பாரும் காட்டியதிறனும், போர்புரிந்த வலிமையும் பாரத நூலைப் பயின்றவர்க்கு எளிதிற்புலப்படும். காலைமுதல் மாலை வரையிலும் போர் நடைபெறும். ஆனால், கடோற்கசன், அசுவத்தாமன் ஆகிய இருவர் போர்மட்டும் இரவு நடைபெற்றது. வஞ்சனையான மாயப்போர் ஒன்றும் புரியவில்லை. முதலில் இருவர் மற்போர் தொடங்கி அவர்கள் உதவிக்குப் பலர் போர்புரிவது வழக்காறு. கரியொடு கரியும், பரியொடு பரியும், தேரொடு தேரும், காலாளொடு காலாளும் எதிர்ப்பன வழக்கம். ஓர் வீரன் இவை அனைத்தையும் எதிர்க்கலாம்.

திறமைக்கும், பெருமைக்கும் தக்கவாறு வீடுமன், துரோணன், அசுவத்தாமன் முதலியோரை அதிரதராகவும், சோமவரதத்தர், பகதத்தர் முதலியோர்

மாரதராகவும், கிருதபன்மன், கிருபன், சகுனி, சல்லியன், சயத்திரதன் சமரதத்தலைவராகவும், கர்ணன், விருடசேனன், துச்சாதனன் முதலிய அரச தம்பியர்கள் அர்த்தரதராகவும் வீடுமன் யோசனைப்படி சுயோதனன் வகுத்தான் என்ப. தற்கால இராணுவ இலாகாத் தலைவர்களில் கமாண்டர், மேஜர், கியாப்டன், கர்ணல் முதலிய அதிகாரிகள் இருப்பன காண்க. இவ்வாறு உத்தியோகஸ்தர்கள் நியமித்த பொழுது கர்ணன் சினந்து சென்றது முன்னர் உணர்ந்தோம். பாண்டவர் ஐவர், பாஞ்சாலி மக்கள், திட்டத்துய்மன், கடோற்கசன், அபிமன்யு, சாத்தகி, சங்கன், பாஞ்சாலன் இவர்கள் கௌரவத்தலைவர்க்கு ஒப்பென்று வீடுமன் கூறினான். ஆதிமூலப்பொருள் கண்ணன் தேரேறி அர்ச்சுனனோடு எதிர்த்தால், மூவுலகிலும் எவரும் எதிர்ப்பதற்கில்லை என்பதும் காங்கேயன் கொள்கை.

தருமன் தன் படையாளிகளுக்கு உடைகளும், படைகளும் வழங்கினான். அவர்கள் உண்மையுடன் பொருவதாய் உறுதியும் கூறினர். அவனுக்கும் ஏழக்குரோணிப் படைகள் இருந்தன. ஆயுதபூஜை செய்தனர். தேவாலயங்களில் வழிபாடுசெய்து பிரசாதம் பெற்றனர். வீடுமன் பத்து நாள் தானைத்தலைமை தாங்கினான். சிகண்டியால் தனக்கு முடிவுவருமென்று முன்னரே கூறியுள்ளான். இவன் பெருவீரனும், அரசியல் தத்துவ ஞானியும், கன்மயோகியுமாவான் என்பது வியாசர் கூற்று. அரசன் சொற்படி நடப்பது அவன் கடமை. பாரதப்பெருமக்களுள் இவனுக்கும் ஓர் உயர்நிலையுண்டு. முதனாளில் சல்லியர் உத்தரனைக்கொன்றனர். சுவேதன்

பீஷ்மரால் கொல்லப்பட்டான். சண்டை நடைபெற்ற நாட்களில் இருவர்க்கும் இன்பமும் துன்பமும் மாறி மாறி வந்தன. பெரும்பாலும் கௌரவர்க்கே துன்பம். அர்ச்சுனனும் சந்தனுமைந்தனும் பெரும்போர் செய்தனர். படைகள் நடுங்கி ஓடின; பகழிகள் பல ஏவினர்; வில் முறிந்தது; வேறுவில் எடுத்தனர்; கண்ணனுடலில் கணைகள் பட்டன; பார்த்தன் சீறினன்; துரியோதனன் இடையே பாட்டனோடு போரை நெருக்கக்கூறினன்; கௌரவர் பால் பலரும் மாண்டனர். "நீ கண்ணனை வணங்குவாய்; அவன் கடவுள். பாண்டவர் வெற்றிக்குக் காரணம் அவனன்றோ?" என்னும் சொல்லை அரவக் கொடியோன் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆறும் நாள் கிரௌஞ்சவியூகம், ஏழாம்நாள் மண்டலவியூகம்முதலியன அமைத்துப் போராடினர். திருதராட்டிரன் மக்களிற் சிலரும், பாண்டவர் பக்கத்துச்சிலரும் மாண்டனர். வீடுமன் வீரத்தைக்கண்டு விசயன் கண்ணபிரானோடு வாய்மையைக் காப்பாற்ற வேண்டுமென்றனன். மறலி மகன் பாட்டன் போரைக்கண்டஞ்சி இவனை வெல்லவியலாது. "கண்ணா! நாங்கள் காட்டிற்சென்று யோகம் செய்ய விரும்புகின்றோம். நாட்டாசையை விடவேண்டும். உனக்கு அதனால் ஒரு கேடுமில்லை" யென்றான். அப்பொழுது ஆண்டவன் வசுக்களின் அம்சமாய்ப்பிறந்த தேவவிரதனை யாராலும் வெல்ல முடியாது. அரசர்குலம் வேரறுக்கவந்த பரசுராமன் இவனோடு பொருது தோற்றான் என்ப. "சிவபெருமான் எதிர்த்தாலும் இவன் சாகான். ஆதலால், யமதனய! அவன் காலில் விழுந்து வணங்குக. இதுவே ஏற்ற முறை" யெனவே, பாண்டவர்

பாட்டன் அடிகளில் வீழ்ந்து பணிந்தனர். நாராயணனைப் பீஷ்மன் தொழுதான். "தருமதனய! பாண்டவர்க்கு வெற்றி உறுதியே. அர்ச்சுனன் என்னை யெதிர்க்கும் போது சிகண்டியையும் முன்னிற்கச் செய்க. அப்பொழுது யான் வீழ்வது திண்ணம்". பின்னர் இவர்கள் மீண்டனர். இவ்வாருயின், துரியோதனனுக்கு வெற்றி எங்ஙனம் கிடைக்கும்? பத்து நாட்களும் கடும்போர் நிகழ்ந்தது. பத்தாம்நாள் அவன் சொன்னவாறு செய்தனர். *பார்த்தன் பகழிகள் அவனுடம்பு முழுதும் சூழ்ந்துகொண்டன. நின்ற நிலையில் மாவீரன் சாய்ந்தான். அம்புகளையே படுக்கையாகக்கொண்டனன். துரியோதனன் துன்புற்றுன்.

* "சரத்தின் சயனம் பஞ்சசயனங்களினு மினிதென்
சிரத்தின்ருழ்வு தீர்ப்பாய் திண்டோள் விசயாவென்ன
வரத்தின் பயனுலுயிரை நிறுத்துமன்னன் மகிழ
வுரத்தினம்பான் முடியை உயரும் வண்ணமுயர்த்தான்".
(பாரதம்)

இங்ஙனம் மரணதுன்பமில்லாது, சிலநாள் பகழிப் படுக்கையில் கிடந்து, முத்தி பெற்றனன். சுயோதனனே இந்நாட்களில் இடையிடையே வீமனேடு எதிர்த்தும், படைத்தலைவனை நயந்தும், சினந்தும் தன் கடமையை நிறைவேற்றினன்.

பதினேராம் நாள் துரோணன் தலைமையில் யுத்தம் தொடங்கப்பட்டது. ஐந்துநாட்களும் கடும்போர்செய்தனன். தருமனைப்பிடித்துத் தரும்படி துரியோதனன் நெருக்கியும் நடைபெருமையால் ஆசிரியனைக் கடிந்துகொண்டான். அபிமன்யுவை எதிர்க்கத் தன் மகன் இலக்குமணனைப் பல

வீரருடன் அனுப்பவே, கொடும்போர் மூண்டது. இலக்கு மணன் உயிர்துறந்த காலையில் மன்னர் மன்னன் மனமுழன்று "என் மகனைக்கொன்ற அபிமன்யுவை இப்பொழுதே வதைசெய்யாதிருப்பின், மண்ணரசும் யான் வேண்டேன்" பெருமிதவாழ்வும் வேண்டேன்; என்னுயிர் தானும் வேண்டேன்; என்று, கடுஞ்சினம் மொழிந்தான் என்க.

* "மன்னவர் மைந்தரோ டென் மைந்தனைக் கொன்றமைந்தன்
றன்னையிப் பொழுதைமைப்பிற் சென்று சயமுறச் செகுத்திலேரேற்
பின்னையிவ்வரசும் வேண்டேன் பெருமிதவாழ்வும் வேண்டேன்
என்னுயிர்தானும் வேண்டேன் என்றனனிராசராசன்" (பாரதம்)

இதனைக்கேட்ட வீரர்கள் பற்குனன் மகனைச் சூழ்ந்துகொண்டு கடும்போர் புரிந்தார்கள். மாரதர் அறுவர் ஒன்றுசேர்ந்து ஓர் காளையை எதிர்த்தனர். இதற்கொப்பான போர் யாண்டும் காண்டலரிது. கர்ணன் வில்லை முறித்தான். துரோணன் பரிகளையும், கிருபன் தேராளியையும் கொன்றார்கள். என்றாலும், அபிமன்யு தளராமல் நெடுநேரம் போராடினான். ஒருவனால் எத்தனை வீரர்களை எதிர்க்கமுடியும்? இறுதியில் கர்ணன் கரமறுத்தான்; சயத்திரதன் சிரமறுத்தான்; அந்தோ! வீரனும் உயிர்துறந்தான். அநியாயமாய் இளைஞனைக் கொன்றுவிட்டார்களென்று எல்லோரும் வருந்தினர். இப்போரின் முடிவை வில்லி இயம்புவதுணர்க.

"ஓரிரண்டு வயவர்முனைந்துடன் பொருத வுலகியற்கை
யொருவன்றன்மேற்
போரிரண்டு புறமும் வளைந்தொரு கோடிமுடி
வேந்தர் பொருது கொன்றார்
தேரிரண்டு கிடையாத குறையன்றோ களத்தவிந்
தான் சிறுவனென்றென்
றீரிரண்டு பெயரொழிய மற்றுள்ளராழுதிரங்கி
யென்பட்டாரே". (பாரதம்)

அர்ச்சுனன் இதையறிந்து துயர்க்கடலில்மூழ்கி, "நாளை மாலைக்குள் சயத்திரதனுயிரைப்பழிக்குப்பழி வாங்குவேன். அன்றெனில், பேரெரியில் மூழ்குவேன்" என்று ஆணையிட்டான்.

* "சிந்துபதி யாகியசெ யத்திரத னைத்தே
ருந்தமரி னுள்ளுரு மேறென வுடற்று
வந்திடு மவ்வளவி னுவிகவ ரேனேல்
வெந்தழலின் வீழ்வனிது வேதமொழி யென்றான்,"

* "சேயனைய என்மதலை பொன்றவமர் செயதோன்
மாயமுன் அடர்த்துலைய வாகைபுனை யேனேல்
தாயர்பசி கண்டுமனி தன்பசி தணிக்கும்
நாயனைய புல்லருறு நரகிலுறு வேனே".

இவை பாரதவாசிரியர் கூற்று.

பதினான்காம் நாள் கடும் போர் நிகழ்ந்தது. சயத்திரதனைப்பேணி, கர்ணன் அசுவத்தாமன் முதலிய பல வீரரும் சூழ்ந்து நின்றார்கள். இவர்களை யெல்லாம் கிரீடி முறியடித்தான். சுயோதனனையும் கலங்கவடித்துச் சயத்திரதனைத்தேடியும் காணவில்லை. பொழுது முடியும் எல்லையாயிற்று. நூற்றுவர், பார்த்தன் ஒழிந்தானென்று ஆனந்தக்கூத்தாடினர். திருமகள் மார்பன் திகிரியால் கதிரவனை மறைக்கவே, சயத்திரதன் வெளிப்பட்டான். பாசுபதாஸ்திரத்தால் பார்த்தன் அவன் தலையறுத்தானென்ப. நேரம் பிழையெனக் கௌரவர் கூறவே, சக்கரப்படை விலக்கப்பட்டது. வெய்யவனொளி எங்கும் வீசிற்று. துரியோதனாதியர் முகங்களும் இருண்டன.

நாககேதனன் துரோணரோடு வருந்தினன். ஒவ்வொரு நாட்போரிலும், அவன் பாகத்திற் குரிய அநுகூல நியாயங்களும் தென்படுகின்றன.

துரோணன் தருமனை யெதிர்த்தபோழுது வீமன் உதவிக்கு வந்தனன். இரவும் போர் நடைபெற்றது. கர்ணன் கடோற்கசனையும், வில்லாசிரியன் துருபதனையும் வதைத்தார்கள்.

பதினைந்தாம் நாள் ஆசிரியனை வெல்வது அரிதென்றெண்ணி, திருமால் ஓர் சூழ்ச்சி செய்தான். அசுவத்தாமன் என்னும் பெயருள்ள ஓர் யானையைப் பீமனைக் கொண்டு கொல்லச்செய்து, அது மாண்ட செய்தியை தருமனால் வெளியிடச்சொன்னான். முரசக்கொடியோன், "அசுவத்தாமா ஹத: குஞ்சர:" என்று சொல்லவே, துரோணன் தன் மகன் இறந்ததாய் எண்ணி வில் எடாமல் சோர்வுற்று நின்றனன். குஞ்சரமென்ற சொற் கேளாவண்ணம் இறைவன் சங்கமும் முழக்கினனென்க.

* "தீதிலானுரைதத மாற்றஞ் செவிப்படு மளவினெஞ்சிற்
கோதிலானெடுத்த வில்லுங் கொடியவெங்கணையும் வீழ்த்திப்
போதிலானிறந்தான் போலும் புதல்வனென் றினைதலின்றி
ஏதிலான் போலநின்றான் யார்கணும் பந்தமில்லான்"

என்றார் வில்லிபுத்தூரார்.

கயிலையீசனோடொத்த வீரன் அமைதியாயிருக்கவே, திட்டத்துய்மன் அம்பினால் சேனைத்தலைவன் தலையைக் கொய்தான்.

"துள்ளிய பரித்தேர்த்திட்டத் துய்மன தம்பு சென்று
தள்ளிய தப்போதந்தத் தவமுனி தலையையன்றோ".

அடுத்த தலைவர் பட்டம் கர்ணனுக்கு வந்தது. இரு நாளும் இரும்போர் நடைபெற்றது. கண்ணன் தேரோட்டு வதும், விசயன் அம்போட்டுவதும், கர்ணன் படை யோட்டுவதும் பார்த்துப்பலரும் வியந்தனர். பதினேழாம் நாள் கர்ணன் நாகாஸ்திரம் எடுத்து அர்ச்சுனன் தலையை நோக்கிவிடவே, பார்த்தசாரதி தேரைத் தாழ்த்தினர். கணை அவன் முடியைக்கொண்டு சென்றது. மறுகணை தொடாவிரதமுடையவனன்ருே? பார்த்தன் பல அம்பு கள் ஏவியும் மாளவில்லை. இதனிடையில் பாண்டவர் நேசன் ஓர் மறையவன் வடிவில் தோன்றி, பெருவள்ளலின் புண்ணியமனைத்தும் வாங்கி, வரமும் ஈந்து, சென்ருன். பின்னர் அனுப்பிய பற்குனன்கணை கர்ணனைக்கொன்றது.

கடைசிநாள் சல்லியனிடம் சென்று துரியோதனன் வருமாறு கூறினன்.

“நீயே எனக்குயிருநீயே எனக்குளமுநீயே எனக்குநிதியு
நீயே துணைப்புயமுநீயே விழித்துணையுநீயே யனைத்துநிலையு
நீயே முனைச்செருவிலதிரதரின் மாரதரினிகரற்ற கோவுமதனு
னீயே முடித்தியென தெண்ணத்தையென்று வகைநிகழாமகிழ்ந்து
புகழா”. (பாரதம்)

அவனும் தானைத்தலைமை தாங்கினுன். சேனைத்தலைவனுக்கு வரிசைகள் பலவும் நல்கி, தானதருமங்கள் செய்து போருக்குப் புறப்படச் செய்தான். மனந்தளரா மன்னவன் சமயோசிதபுத்தி மாண்புடைத்து. பாண்டவர் சல்லியன் வரவுகண்டஞ்சினர். பெரும்போர் மூண்டது. அரசன் தம்பியரனைவரையும் வீமனழித்தான். வஞ்சகச் சகுனியைச் சாதேவன் கொன்றனன்.

தருமனுல் சல்லியன் கொலையுண்டனன். தலைவன் படவே படைகளும் சிதறுண்டன.

சுயோதனன் ஒருவரிடமும் சொல்லாமலும், மனம் தளராமலும் இறந்தவரை யெழுப்பமுயற்சித்தான். ஓர் பொய்கையில் மூழ்கி, உபதேசம்பெற்ற மந்திரம் ஜபித்துப், புலன்களை அடக்கி, ஞானதீபம் கொளுத்திச் சிறந்த யோகி போலானான்.

"பன்னாளும் யோகம் பயில்வோரிற் பதின்மடங்கர்த்
தன்னாகமுற்று மெலிவின்றித் தயங்குமாறு
நன்னாளமுல நளினத்தை மலர்த்திநாவா
லுன்னா மலுன்னு முறைமந்திர மோதினானே"

என்பது வில்லிபுத்தூரார் திருவாக்கு.

இதனிடையில் அசுவத்தாமன் கிருபன் முதலியோர் வந்து சொல்லியும் தவம் முடக்கவில்லை. இராமாயணம், ஸ்காந்தபுராணம் முதலிய நூற்களில் தலைவர்கள் இறந்தவரை யெழுப்ப முயற்சித்ததுபோல், இவனும் முயன்றானென்க. வீமன் இதனையறிந்து பொய்கைக்கரையிற் சென்று முன் செய்த கொடுமைகளைக்கூறிப் போருக்கழைத்தான்.

"நெஞ்சறிய நீயெமக்கு நிலைநின்றபழியாக நெடுநாட் செய்த
வஞ்சகமும் பொய்மொழியு மனுநீதி தவறியது மறந்தாய்கொல்லோ".

* "இனத்திடை நின்றொரு பதின் மேலெழுநாளு
மொருவருடனிகல் செய்யாமற்
றனத்திடை நின்றுளமகிழும் புலயரைப்போன்
மதத்துடனே தருக்கிவாழ்ந்தாய்
சினத்திடைவெம் பொறிபறக்கச் செயிர்த்திருகண்
சிவப்பேறச்செருச் செய்யாமல்
வனத்திடைசென் றொளிப்பரோ மண்முழுதுந்
தனியாளுமன்ன ராஜோர்". (பாரதம்)

என்று துரியோதனன் மெய்சுடச் சொன்னான். மந்திரம் முற்றுப்பெறவில்லை. உடன் வீரன் வெளிவந்து திருமால் முதலியோரை நோக்கிப் போராடலாம். என்னிடம் தண்டாயுதம் இருக்கின்றது. யார் எதிர்க்கின்றனர்? எனவே, கஞ்சன் வைரி இளமை முதல் பகை கொண்ட பீமனும் நீயுமே போராடவேண்டும். அன்றியும், மாருதியின் கடுஞ்சினக்கூற்றும் உளது. இதனைக்கேட்டு மகிழ்ச்சியோடு போர் செய்ய வந்தனன். எவ்வளவு துன்பம் இருப்பினும் வீரர் பொருட்படுத்த மாட்டாரென்பது துரியோதனன் சரிதம் நம்மைக் கற்பிக்கின்றது. எப்படைகொண்டு எம்மோடெதிர்க்கப் போகின்றாய் கூறுக?

*"கொண்டனிகர் திருமேனிக் கோபாலனிவையுரைப்ப
வண்டுபடி வலம்புரித்தார் வயவேந்தன் மனங்களித்துத்
திண்டிறல்வீ மனைநோக்கிச் சிலைமுதலாம் படைகொண்டோ
தண்டெனுநின் படைகொண்டோ சமர்விளைப்பாய் சாற்றென்றான்".
(பாரதம்)

"நினைகரத்தின் மிசையேந்தி நின்றது நீள்கதையாகி
லெனைகரத்திற் றண்டுகொண்டே யானுமுடற் றுவனென்றான்
றனைகரற்கு குமரற்குந் தண்டுழாய் முடியவற்குந்
தினகரற்கு மேலான சிந்தையுடன் செருச்செய்வோன்".

எனப் பாரதவாசிரியர் சுயோதனன் பெருமைக்குரிய விடங்களை நடுநிலைதவறாது கூறுவதுன்னுக.

அப்பொழுது புனிதநீராடச் சென்ற விதுரனும், பலராமனுவரவே, எல்லோரும் வணங்கினர். மாமாயன் போரில் நிகழ்ந்த செய்திகள் யாவும் உரைத்தனன்.

குறித்தவிடத்திற் போர் தொடங்கப்பட்டது. இருவரும் கதை கொண்டு நெடுநேரம் போராடினர். எவர் வெற்றி பெற்றாரென்று சொல்லவியலாது. போர்நடுவே யாருதிதளருவதென்னை? "கருணைக்கடலே! கூறுக"வெனப் பார்த்தன் கண்ணனிடம் வினவினன். அவனைக்கொல்லுதல் எளிதன்று. அரசதந்திரத்தில் பகைவரைச் சூழ்ச்சியால் கொல்லலாம் என விதியுளது. அவன் துடையிலடித்தால் உயிர் நீங்குமென முன்னைய சாபமும் ஒன்றுண்டு. உடன் அர்ச்சுனன் துடையிற் பன்முறை தாளமிட்டான். வீமன் குறிப்பாயுணர்ந்து கதையால் ஊக்கோடடித்தனன். தொடை முறிந்து நிலத்தில் விழுந்தான். மார்பையும், தோளையும் மிதித்துக் குத்தித்தள்ளினன். அவன் செயல் ஒவ்வொன்றும் சொல்லி, கதையால் தாக்கிச் சினம் தணிந்தான் என்க. "நீ எம்மைச்சதித்ததால் யாமும் உன்னைச் சதித்தோமென்றறிக". துரியோதனன் கண்ணன் வஞ்சனையைச் சொல்லிக் கதறுவது காண்க.

"நிறத்த நீலகிரியொக்கவே யிருநிலத்தின் வீழ்குரு
குலத்திறை
னுறைத்து மீளவுமுயிர்த்து மாயனெடுருத்துவாசக
முறச் சொல்வான்
குறிப்பினால் விசயனைக் கொடாருயிர் குதிக்க
மாமதி கொளுத்தினை
யறத்தினுடன் மறதநீர் மையினையற் பராயறி கிற்பரோ.

"சலத்தினால் வினையியற்றுவார் முடிதரித்த
காவலரொடொப்பரோ
நிலத்தில் வாழ்வவர்பெறக் கொடாயினி நினைத்த
காரிய முடித்தியே.

(பாரதம்)

இவ்வாறே, செருக்களத்தில் வீழ்ந்து கிடக்கும் வாலி, இராமபிரானைப் பழித்தமைபோல், சுயோதனனும் பழித்துக்கூறினன். வாலி இராமனை இறைவனாக மதித்தானன்றோ? இவன் அங்ஙனம் எண்ணவில்லை. இராகவன் முறையின்றி ஒளியம்பெய்தது நோக்கிக் "கருணைவள்ளால்! ஒழுங்கற்ற கலிகாலம் ஊர்ந்துதிரியும் குரங்கின் மாட்டோ வரவேண்டும்" என்று பரிந்து சொல்கின்றான்.

"ஒலிகடலுலகம் தன்னில் ஊர்தரு குரங்கின் மாடே
கலியுகுகாலம் வந்து பரந்ததோ கருணைவள்ளால்"

(கம்பராமாயணம்)

சுயோதனன் உயிர் போகும் நேரத்திலும் படைத்த பரம்பொருளையறியாது,

"மலைத்தபோர் தொறுமெனக்கு நீ செய்
பிழை மற்றுளோர் செயகினைப்பரே
குலத்திலே யிழிகுலத்தரானவர்
குறிப்பிலாதிவை பிறக்குமோ".

கருணைக்கடல் கார்வண்ணனை இழிகுலத்தானென்றும், ஓரம் சொல்பவனென்றும் சினந்து அரச நீதியை வற்புறுத்துவதை நோர்க. அவனனுபவத்திலங்ஙனம் தோற்றிற்று.

பலபத்திரன் இதனைக்கண்ணுற்று மிக்க சினத்தொடு முசலம் முதலிய படைக்கலங்கள் ஏந்தி பீமனை உதைக்கப் புறப்பட்டதைக் கண்ணன் தடுத்துவிட்டான். பலதேவன், ஆடவர் அமர் செய்யும் பொழுது கதையால் கடிதடத்தின் மேற்பாகங்களின் அடிப்பாரல்லது தொடையிலடியார், பலரும் கொலைசெய்வர். இங்ஙனம் வீழ்ந்தவன்

பார்பில் ஏறிநின்று கதை கொண்டடிக்க மாட்டார்கள்.

"கொல்லு மரறுண்டு பலரையும் போரதில்
நல்லுமாறில்ல மாறத்து நின்றுருமே".

(எழுத்தச்சன் பாரதம்)

இவன் பன்முறையும் பாண்டவரை வஞ்சித்தான். இவனையும் பீமன் வஞ்சித்தான். தெய்வம் இல்லாது போமோவென வாசுதேவன் மூத்தோனிடம் மொழிந்தனன். அவனவன் செய்யும் கன்மத்தின் பயனை அவனவன் அடைய வேண்டும். "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையு" மன்றோ? இங்ஙனம் பல நயமொழிகளையும் கூறி, பாண்டவர் தமது உறவினர் என்பதையும் சுட்டி அனுப்பினான் என்ப.

பின்னர் அசுவத்தாமன் சீற்றத்துடன் புறப்பட்டு திட்டத்துய்மனையும், பாண்டவர் சிறுரையும் வதைத்தனன். துரியோதனன் ஆசிரியன் குமரனைநோக்கி "இளஞ்சிறுரைக் கொன்றது பாவமன்றோ? என் நினைந்து என்செய்தாய்!" என்று வருந்தினன்.

* "துன்னு பாரதம் தோன்றிய நாள்முதல்
மன்ன ரோட மலந்தனை வாளியால்
சொன்ன பாலர் மகுடம் துணித்தநின்
றென்ன வீரியம் என்னினை ந்தென்செய்தாய்" (பாரதம்)

"அசுவத்தாமா! இப்பழிதீர நீ தவம் செய்வாய்" என்றான். முறைகெட்ட போர் செய்வதும் சுயோதனனுக்கு விருப்பம் இல்லையெனத் தெரிகின்றது. இவனைக்காண வந்த சஞ்சயமுனிவனை நோக்கிப் "பெரியோய்! எந்தை, யானும் தம்பியரும் இறந்தோமென்று கவலையுறவேண்டாம்.

எனது மானமேலாபங்களால் இவை நேர்ந்தன. தம்பிமக்களோடு இனிது வாழக்கடவாய் என்றுரைப் பீராக". உடன் சுயமரியாதை வீரன் வீரசுவர்க்கம் புகுந்தான். பாண்டவரும் நாடு பெற்று நலமொடு வாழ்ந்தனர்.

போரின் ஒவ்வொரு தருணத்திலும் துரியோதனன் காட்டிய வீரமும், பொறுமையும் வியக்கத்தக்கன. பாண்டவர்பால் உள்ளன்புடைய அவன் சேனைத்தலைவர் களை தன் வயப்படுத்திப் போர் புரிவித்தது, துரியோதன னது ஆளும்திறமை செவ்வனே விளக்குகின்றது. உயிர் நீங்குமளவும் காண்பித்த சுயமரியாதையும், ஊக்கமும், குணவன்மையும் அரசருக்கு இன்றியமையா நற்குணங்க ளன்றோ?

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம
உள்ளத் தனைய துயர்வு".

என்னும் தமிழ் மறையின் கூற்றுத் துரியோதனனுக்குச் சாலவும் பொருந்தும்.

போரில் வெற்றி தோல்வி வருவதிலல்ல பெரி யாரது குணகுற்றங்களை ஆராய்வது. எவ்வளவு வன்மை யுடையார்க்கும் தவறு வருதல் இயல்பு. "ஆனைக்கும் அடிசறுக்கும்" என்னும் முதுமொழி பொய்யாமோ? இடுக்கணழியாமையும், பகைவர் திறனறிந்து வீரத்துடன் போர் புரிவதும், எவ்வகைக் குழப்பத்திலும் மனஞ்சலி யாதிருப்பதும், இடருற்ற காலையில் விரைவில் அதினின் றும் விலகிக்கொள்வதும், உறவினருக்கு உடுக்கை இழந்த வன் கைபோல் இடுக்கண் களைவதும், தன் சேனைகளை ஒற்றுமையோடு நடாத்துவதும் ஓர் பெருவீரனுக்கு

இலக்கணமாகும். இவ்வகையில் சுயோதனன் சற்றேனும் குறைபாடுடையவனல்லன் என்பது யாவரும் ஒப்ப முடிந்ததே.

. இதற்கு மாறுகப் பாண்டவர் பெற்ற வெற்றியனைத்தும் வஞ்சனையாலும் சூழ்ச்சியாலும் முடிந்தன வென்று பாரதம் பயிலும் ஒவ்வொருவரும் நன்முய் உணர்வார்கள்.

படையின்றிப் போர் புரியேன் எனக் கண்ணன் முதலில் உறுதிமொழி கூறியும் வீடுமனேடு சுதரிசனம் கையேந்தி எதிர்த்தான் என்ப. அன்றியும், பாண்டவர் கூறிய கடுஞ்சினம் பயனடையும்பொருட்டு திவ்விய சக்திகளை உபயோகித்தது தகுதியென்று அறிஞர்கூற அஞ்சுவர். யாராலும் வெல்லமுடியா வீடுமனையும், ஆசிரியன் துரோணனையும் கொடையிற் சிறந்த கன்னனையும் தருமவழியினின்றும் வழுவி வஞ்சனையாலன்றே வதைசெய்ய நேர்ந்தது. மர்மம் அனைத்தும் ஒருங்கே உணர்ந்தவனும், அவதாரமூர்த்தியும், மனிதசக்திக்கு மேம்பட்டவனும் ஆகிய கண்ணபிரானது பேருதவியில்லாதிருப்பின், பாண்டவர் எங்ஙனம் வெற்றிபெறுவர். பீமன் துரியோதனனுடன் போர் புரிந்ததால் பயன் என்னை? ஒன்றுமில்லையே. துரியோதனன் முன்பெற்ற சாபத்தின் உண்மையையுணர்ந்த கரியகோவலன் துடையில் தாளம் இட்டுக் காட்ட உணர்த்தாதிருந்தால் பீமனுக்குச் சுயோதனனைக் கொல்லவியலுமோ? பகைவருக்கு இவ்விதம் முறை பிறழ்ந்த உதவி இருப்பதைச் சற்றேனும் கவனியாமலும் யுத்த தருமத்தில் அணுவளவாயினும் பிழையாமலும், உயிர் நீங்குமளவும் வீரத்துடனும், சுறுசுறுப்போடும் போர் புரிந்த துரியோதனனுக்கு, வெற்றிமாலை சூட்டுவதோடு

வீரக்கல்லும் நாட்டவேண்டும். இவனன்றோ மன்னர் பெருந்தகை.

போர்க்களத்தில் மடிந்துகிடந்த துரியோதனனது உடலின் மீதேறி நாணமின்றி மிதித்த மாருதி, எவ்வளவு வலியும் ஆண்மையும் உடையவனாயினும், பெரியோர் அவனது இச்செயலை மெச்சமாட்டார்கள். சுயோதனன் பட்டு வீழ்ந்தபோது, அவன் வீழ்ந்த விடத்தில் கல் நட்டு விழாக் கொண்டாட வேண்டும்.

> "ஆறுசென் றியமரில் வீழ்ந்தோர்க்குக்
> கான நீளிடைக் கற்கண் டன்று"

> "மாலை துயல மணிபெறிந்து மட்டுகுத்துப்
> பீலியணிந்து பெயர் பொறித்து—வேலமரு
> ளாண்டக நின்றவமர் வெய்யோற்காகென்று
> காண்டக நாட்டினார் கல்".

(புறப்பொருள் வெண்பாமாலை)

என வீரருக்கேற்ற கல்லைக் கண்டெடுத்து நாட்டி, வழிபாடாற்றிய முறையை ஆன்றோர் புறப்பொருள் நூற்களில் கூறுவன காண்க.

———

# ஒன்பதாம் அதிகாரம்.



## முடிவுரை.

குரு நிலத்தின்கண் நிகழ்ந்த பாரதப்போர் முடிந்து இப்பொழுது சுமார் 50 நூற்றாண்டுகளாகின்றன. அப பெரும் போரிற் சார்ந்த வீரர்களது சரிதத்தைப்பற்றி அறிய ஆவல் மிகும். இது இந்துக்களுக்கன்றி நாகரிகம் முதிர்ந்த சமூகத்தார் யாவர்க்கும் இயல்பாம். நாட்செல்லச் செல்ல எப்பொருட்டும் அழகு மிகுதல் உலகஅநுபவ மல்லவா? "முற்றத்து முல்லைக்கு மணமில்லை" என்பது போல், இக்காலத்துமக்கள் எத்துணை நல்லுணர்வுமிக்க சான்றோராயினும், பலராலும் புகழப்படாதிருத்தல் யாண்டும் இயல்பே. உயிர்பெற்றிருக்குமபோது பிறரால் மதிக்கப்படாத பலரும் உயிர்நீத்தபின் விழுமியோர் களென எண்ணப்படுகிறார்கள். நல்லிசைப்புலவர் காளி தாசனும், ஜகப்பிரியர் ஷேக்ஸ்பீயரும் கவிச்சக்கரவர்த்தி கம்பரும், வீற்றிருந்தகாலத்து அவர்கள் பெருந்தமையை யார் அறிந்தார்கள். இற்றாலி தேசத்தின்கண் தோன்றிய நல்லிசைப்புலவரான டான்றி என்பவர்மீது பகைமை யால் அந்நாட்டவர் இருவகுப்பாய்ப் பிரிந்தனர். பிறகு, இரு பிரிவிலும் சேர்க்காது நாட்டைவிட்டு ஓட்டினர். பின்னர், அப்பாவலன் கல்விச்செல்வத்தால் தன் காலத்தைப்போக்கி இறுதியில் ஈஜிப்துதேசத்திற் சென்று வறுமையுற்று வருந்தி உயிர்துறந்தான் என்ப. மாண்ட பின் அவன் பெருமையை அறிந்து அவனுடம்பு தத்தமக் கென்று ஈஜிப்த் தேசத்தாரும், இற்றாலிதேசத்தாரும்

பிணங்கி பெருவழக்காடிய தாய்ச் சரித்திரத்தாலறிகிறோம். கண்ணிருக்கும் பொழுது காட்சியினருமையை யறியார் என்பது பெரியார் சரிதத்தில் நன்கு புலனும்.

புராணத்தலைவர்களது சரிதமும் நாளடைவில் ஆவல் அளிக்கின்றது. புராண இதிகாசங்கள் வாசிக்குந்தோறும் மீண்டும் மீண்டும் அன்னார் சரிதத்தைப்படிக்க ஆர்வம் மிகும். அவர்கள் புதியயாக்கையோடு நம் கண்ணில் தென்படுவர். நம் தலைவர்களான துரியோதனனும் உதிட்டிரனும் தம்மில் பகைக்கவில்லை. வீமன் கதைக்குத் துச்சாதனன் உதிரத்தை அருந்த ஆவல் இல்லை. அருச்சுனன் காண்டீவத்தை வைத்துக்கொண்டு அயர்ந்து இருக்கிறான். கண்ணனது கீதைமொழி போர்புரிவதற்கன்று. பேரின்பம் அடையும் பொருட்டே. போர்க்களத்தில் கழல்கட்டி நின்ற வீரர் அனைவரும் களைப்பு நீங்குமாறு மௌனமாயிருக்கின்றனர். ஆகவே, இவர்களது இயற்கையான தன்மையறிவதற்கு இதுவே ஏற்ற தருணம்.

மக்களுக்கு வியப்பான வன்மைகளைப்பற்றி அறிய ஆவல் அதிகமெழும். புலன்களுக்கு எட்டாப் பொருளை ஆராய்ச்சி செய்வுழி பெருகிய மகிழ்ச்சி பிறப்பது இயல்பன்றோ? வானவூர்திகளால் ஆகாயத்தில் நடமாடுவதற்கும், குழற்கண்ணாடி வாயிலாய் வானத்திலுள்ள கோள்களின் நிலைகளை அறிவதற்கும், இயற்கை வன்மைகளின் தன்மைகளை அறிந்து அவற்றை தன் வயப்படுத்துவதற்கும், பல்வகை உயிர்வகைகளின் உண்மையை உணர்வதற்கும்

நன் மக்கள் செய்யும் விடாமுயற்சி அளவிலா ஆற்றலை அடையும் பொருட்டாம். மக்கள் உள்ளத்தின் மறுகரை காண முயல்வோர் கானல் நீர் காண்போர் போல் மயக்க முறுவர். எட்டாத இப்பொருளைப்பற்றி ஆராயுந்தோறும் அதற்கு அழகு மிக்குகாணப்படும்.

பெரியார் பலரும் சுயோதனனைப்பற்றி உரைத்து மாற்று நோக்காதிருக்கவில்லை. சுயோதனன் என்றல்ல மற்று எவரது தன்மையும் முற்றுமுணர இயலாதெனினும், அதனை அறியும் பொருட்டுப்பலவாறு முயல்வது பிழையன்று. அவன் மனநிலைமைப் பன்மாதிரியிருந்த தென்பதுறுதியே. ஒருகால் தன் மனம்போல் செய்கின்றனன். மற்றொருகால் இராஜதந்திரத்தில் ஈடுபட்டு வல்லமை காட்டுவதுண்டு. சிலவேளையில் அபிமானியாயிருத்தல் கூடும். மறுமுறை அடிமையைப் போல் வணக்கத்துடன் காணப்படுவான். எப்பொழுதாயினும் உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசவோ, ஆண்மையில் பின்னடையவோ, தன்னோக்கம் நிறைவேற்றுவதில் முயற்சிகுன்றவோ, குடிகளுக்குத் தீமை புரியவோ துரியோதனன் செய்ததாய்ப் பாரதம் கூறவில்லை. இப்பெருமகனைப்பற்றி ஆராய்ச்சிசெய்தல் எளிதல்லவாயினும், அங்ஙனம் துணிவது பயனற்ற செய்கையாகாது.

துரியோதனன் எவ்வளவு படித்தும் என் பயன்? அவனைப் படைத்துக் காத்த ஆண்டவனிடம் சிறிதும் பத்தி கொள்ளவில்லை. "மானிடப்பிறவிதானும் வகுத்தது

மனவாக்காய ஆனிடத்தைதந்துமாடும் அரன்பணிக்காக வன்றோ"? நூலைக் கற்பது நூலின் பயனும் இறைவனை யடையவாகும்.

† "கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருெ டொழாஅ ரெனின்".

என்ருர் வள்ளுவனுர். இராவணன், சூரபன்மன், முப்புரத்தார் முதலியோர் தீமைகள் பல புரியினும், முழுமுதற் கடவுள் சிவபெருமானிடம் மிக்க பத்தி உடையவராய்க் காணப்பட்டனர். இக்கதைத் தலைவன் அவர்களினும் கடையவன். திருமால் பத்தி யவனுக்கின்றியமையாதது. அவன் கேட்டிற்கு பத்தியின்மையும் ஓர் காரணமே. கடவுள் வழிபாடு முக்கியமென்று கொள்ளாத சில சமயிகளைப் போலவும், இறைவனை யெண்ணுத இக்கால சில விஞ்ஞானிகளைப் போலவும் இருந்தானென்க. ரஷியப் பொதுவுடைமையாளரையும் சான்றுபகரலாம். போர்க்களத்தில் மாண்டவரை யெழுப்ப யோகிருந்து மிருத்து சஞ்சீவி மந்திரம் ஜபித்ததாயறிந்தோம். நாடோறும் கடவுளையுன்னிப் பாண்டவரைப்போல் ஏன் வழிபாடு செய்யவில்லை. இது அவனது இரண்டாம் குற்றம்.

பாண்டவர்களின் எத்தகைய நன்மைக்கும் கண்ணன் பத்தியே காரணம். இன்பத்திலும், துன்பத்திலும் அவர்கள் ஆண்டவனைச் சிக்கெனப் பிடித்தனர்.

காந்தாரி மைந்தன் கண்ணபிரானைக் கடவுளாக மதிக்கவில்லை. அன்றியும், இடையனென்றும், இழிகுலத்தவனென்றும் ஆய்ச்சியர் கையாலடிபட்டவனென்றும் இகழ்ந்தானென்ப. அரசவையில் சகுனியின் ஏவலால் வாசுதேவனைத் தண்டிக்க முயன்றபொழுது பெருவடிவம்

எடுத்த காலையில் யாவரும் தொழுதலையும் உணராதது பெருங்குற்றமாகும். நல்லாரைக் காத்துப் பொல்லாரைத் தண்டிக்க வந்த இறைவனை, அதேகாலத்தில் வீற்றிருப் போர்க்குக் கூடுதலாய் வணங்கவழியுண்டு. சுயோதன னுக்கு அதுவுமில்லை. கோவர்த்தனமலையைக் குடையாகப் பிடித்ததும், காளியனைக் காலால் மிதித்ததும், கம்சன், சிசுபாலர்களை வதைத்ததையும் அறியாதுபோனது விந்தையே. எத்திய குணமுடையவனும் நன்மையடைய வேண்டுமேல், படைத்தளித்தழிக்கும் பரம்பொருளின் திருநாமத்தை எண்ணவேண்டும்.

> "கொல்வா ரேனும் குணம்பல நன்மைகள்
> இல்லா ரேனும் இயம்புவ ராயிடின்
> எல்லாத் தீங்கையும் நீங்குவர் என்பரால்
> நல்லார் நாமம் நமச்சி வாயவே".

என்பர் அப்பர் சுவாமிகள். துரியோதனனைப் பழிக்கப் புகுந்தால் கண்ணனை யிகழ்ந்ததும், அவனிடம் பத்தி செய்யாததும் புலப்படும். கடவுள்பத்தியில்லா மக்கள் பலர் உலகில் வாழ்ந்திருக்கின்றனர். லிங்கன், ஜபேஷ்ஸன், பிராங்கிலின், இங்கர்ஸால் முதலியோர் பெரியரர்களே. இவர்கள் இறைவழி பாட்டிலீடுபடவில்லை. இக்கூட்டத்தில் இவனையும் சேர்க்க.

சுயோதனனைப் போலொத்த வீரன் அர்ச்சுனன் நிலைமையை நோக்குவோம். வில்லில் இவனுக்கிணையெவரு மில்லையென்று உலகம் கூறும். கடவுள் வழிபாட்டிலும் சிறந்தவன். சைவவைணவ வேற்றுமையின்றிச் சிவபிரானி டம் பாசுபதாத்திரம் பெற்றான். கண்ணனைக் குருவாக வும் கொண்டது நன்மையாய் முடிந்தது. பார்த்தனா லன்றோ பாரதமக்கள் ஞானவொளியைப் பெற்றனர்.

சிரிய நூற்களில் ஒன்றான வேதசிரசென்னும் பகவற் கீதையை நமக்களித்தது யார்? சோம்பேறிகளுக்குச் சொன்ன வேதாந்தநூலன்று. போர்க்களத்தில் ஆண்மை மிக்க வீரனுக்குரைத்த வேதாந்தம். இங்ஙனம் ஞானத்தி லும், வீரத்திலும் இலங்கினதால் சுயோதனனிலும் மேன்மைபெறக் காரணமாயிற்று.

வீமன் அர்ச்சுனனைப்போல் மேற்கூறிய விருதுறை களிலும் சிறப்புற்றோங்கினன். கள்ளமற்ற இவனது உண்மை பத்தியை, உலகம் எடுத்துக் காட்டாக வீமபத்தி யென்று புகழும். நல்லொழுக்கத்தில் இவனுள்ளத்தின்நிலை யை நன்கறிக. முனிவர் பேணிய நெல்லிக்கனியை வீழ்த்திய பின், மீண்டுமதனைப் பொருந்தச்செய்வதற்குப் பாண்டவ ரும், பாஞ்சாலியும் தத்தம் எண்ணங்களை உண்மையுடன் உரைக்கவேண்டுமென்றனர். அவ்வாறு கண்ணன் முன் னிலையில் வீமன் கூறுவதை யோர்க.

"பிறர்மனையவரைப பெற்றதாயெனவும்
பிறர் பொருளெட்டியே யெனவும்
பிறர் வசையுரைத்தல் பெருமையன்றெனவும்
பிறர்துயரென்று யரெனவும்
இறுதியே வரினும் என் மனக்கிடக்கை
எம்பிரானி வையென வுரைத்தான்".

பிறர்மனை நயவாமை, வெஃகாமை, இகழாமை, பிறர் துயர் பொறாமை ஆகிய நாற்குணங்களையும் நாற்படை களாகக் கொண்டானென்க.

கண்ணன் வஞ்சகன்; பாண்டவர்பால் மட்டும் நேசம் மிக்கவன் என்றெல்லாம் இயம்புவது, இறைவன் தன்மை யை யறியாதார் கூற்றாகும். அவன் நல்லாரைக்காத்துப் பொல்லாரை ஒறுத்துத் துயர்தீர்க்க வந்தவனன்றோ?

மக்களின் வினைக்கேற்பப் பயனளிப்பான். பாண்டவர் உண்மையன்பராதலால், தேவகி மைந்தன் அவர்கட்குத் தோன்றாத் துணையாயிருந்து இடுக்கண்களினின்றும் காப்பாற்றினனென்றறிக. துரியோதனாதியர் தீவினை யியற்றித்தீய பயனை யடைந்ததற்கு எம்பெருமானை யேன் குறை கூறவேண்டும்? "தன் விதிக்குத்தானே கர்த்தா" வென்றார் சுவாமி இராமதீர்த்தர்.

அறம்வி ழிதஞ்செய் வோருக் கநுக்கிர கத்தைச்செய்வன்
மறமலி யகிதஞ் செய்யி னிக்கிரகத்தை வைப்பன்.

(சிவஞானசித்தியார்)

நல்வினை தீவினைக்கொக்கவாறு இறைபலனளிக்கும். எப் பொழுதும் கடவுளை வழிபடுக.

"இடரினும் தளரினும எனதுறு நோய்
தொடரினும் உனகழல் தொழு தெழுவேன்". (தேவாரம்)

நாடோறும் நாராயணன் நாமத்தை யோதினால் கூற்று நோய் நீங்கும். அப்பால் தேவருமாவர். எல்லா நன்மையும் எய்தும். வைணவரிற்சிறந்த நம்மாழ்வார் கடவுள் நாமச்சிறப்புக்கூறுவது காண்க.

"கெடுமிடராய வெல்லாம் கேசவா வென்ன நாளும்
கொடுவினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்
விடமுடையரவில் பள்ளி விரும்பினான் சுரும்பலற்றும்
தடமுடை வயலனந்த புரநகர் புகுதுமின்றே".

"புண்ணியம் செயது நல்லபுலனொடு மலர்கள் தூவி
எண்ணுமின் எந்தை நாமம் இப்பிறப்பறுக்குமப் பால்
திண்ணம் நாமறியச்சொன்னோம் செறிபொழி லனந்தபுரத்து
அண்ணலார் கமலபாதம் அணுகுவார் அமரராவார்".

(திருவனந்தபுரப்பதிகம்)

எத்துணைச்சிறப்பாக மக்களை வணங்கச்சொல்கின்றனர்.

"கறுத்த மனமொன்றும் வேண்டாக் கண்ணனல்லால் தெய்வமில்லை" யென்பதால் துரியோதனன் கண்ணனை வழிபட்டிருந்தால் நலனடைந்திருப்பான்.

தாமோதரன் தொழுதகைத்துன்பம் துடைப்பவன். துரியோதனன் உள்ளம், உரை, செயல்யாவும் ஞான சத்தியால் அறிந்தான். பத்தர் மீதுள்ள இயற்கைக் கருணையால் கௌரவர் செய்து முடிக்க வெண்ணிய வனைத்தையும் கிரியாசத்தியால் மாற்றிவிட்டான். இது கடவுளின் அறிவிச்சைசெயல் ஆகிய முச்சத்திகளின் இயல்பாகும். "நாம் எண்ணுவதொன்று; கடவுள் எண்ணுவது மற்றொன்று" பாரத நூல்முழுதும் இதன் நுட்பம் தெள்ளத் தெளியக் கிடக்கின்றது. துரியோதனன் அரசியல் தந்திரமெல்லாம் கண்ணன் வல்லமையின் முன்னிற்குமோ? உலகமக்கள் இதினின்றும் உயர் நீதி அறிந்து கொள்க.

அரசியல் கண் கொண்டு நோக்கும் பொழுது துரியோதனனுக்கு உயர் நிலையுண்டு. சமயக்கண் கொண்டு பார்க்கும் பொழுது பாண்டவர்க்கே உயர் நிலையுள்ளது. புண்ணிய மூர்த்தியாம் கண்ணனுதவி தருமன் முதலியோர்க்கிருந்தது நன்மையே. அவ்வாறே சுயோ தனனுக்கும் சமயத்துறையிலும் நன்னிலை பெறலாம். அகந்தையுறும் கர்ணன்; வஞ்சகச்சகுனி, கொடிய துச்சா தனன் இவர்கள் கூட்டுறவை விட்டு வீடுமன், விதுரன், துரோணன், சஞ்சயன், வியாசர் முதலிய பெரியார்களது அரியஉபதேசப்படி நடந்தால் இக்கேடுகள் வாரா.

மானிடர் முதற்கொண்டு சராசரங்கள் யாவும் கால நிலைமைக்கொத்தவாறு மாறுபடல் தொன்றுதொட்டு வழக்கு. உருவத்தைப்போல் உணர்ச்சியும் மாறுதல் இயல்பாம்.

உணர்ச்சியில்,முற்காலத்திற்கும், தற்காலத்திற்கும் மிகுந்த வேற்றுமையுளது. இன்று நாம் நன்றெனமதிக்காதவை அன்று பெருமையாயிருக்கலாம்.

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையினனே".

என்னும் நன்னூலார் கருத்தும் இதனேடொவ்வும். பீமனுக்கு ஆயிரம் யானைகளின் வன்மை உளதோ வொன்றையுறுவோர் பேராசிரியர் இராமமூர்த்தியையும், கலியுகப் பீமன் ஸாண்டோவையும் இவ்வுலகில் உயிருடன் இருந்ததில்லையென்பர்.

இந்திய மக்களுக் காண்மையில்லை. போரென்றால் அஞ்சியோடுவர். அரசியல் தந்திரம் தெரியாது. இவை போன்ற குறைகளிருப்பனவாய் இக்கால மக்களிற்சிலர் கூறுவர். அன்னர் சுயோதனன் சரிதையைப்படித்தால் மிக்க மகிழ்ச்சியடைவர். தற்காலப்பாரத மக்களுக்கு வேண்டுவன போர்வலியும், அரசியல் வல்லமையுமாம். அவையிரண்டிலும் துரியோதனன் முன்னணியில் நிற்பதால் மேனுட்டார் இவனைப் புகழக்கூடும்.

இம்மண்ணுலகில் பயனற்றபொருள் எதுவுமில்லை. துரியோதனனிவ்வுலகில் ஏன் பிறந்தனன்? அவனது முக்கிய நோக்கம் என்ன? இம்மையில் இவ்வாழ்வு சுய நலத்திற்கு மட்டுமென்றெண்ணினனே? அல்லது, அரசியல் வல்லமையால் எதையும் நிலை நாட்டிவிடலாம் என்று துணிந்தனனே? ஊழில்லையெனினும், முயற்சி பயனைத் தருமென நம்பியிருந்தனனே? இத்தகைய பல வினுக்களுக்கும் துரியோதனன் சரிதை விடைபகரலுற்றது. புராண இதிகாசங்களை ஆழ்ந்து ஆராயுங்கால் உலகத்தை ஆட்டிவைப்போன் ஒருவன் உளனெனப் புலப்படும்.

அவனது சக்தியின்ஏற்றத்தாழ்வுக்கு ஒத்தவாறு சிலர் உலக அழிவுக்குரியராகவும், சிலர் பெருமக்களாகவும் காணப் படுவர். அன்னோர் புரியவேண்டிய கடமைகள் முடிந்து விட்டால் சிறிது நேரம் கூட உலகில் இருப்பதில்லை. இராவணன் அங்ஙனம் தோன்றிய வீரருள் ஒருவன். இராவணனுக்கும், சுயோதனனுக்கும் பற்பலபொருள்களில் பொருத்தம் உளது. இருவரையும் பகைவர்களால் வெல்ல முடியாது. இன்பநுகர்ச்சியிலும், அடங்காவாற்றலிலும், அபிமானத்திலும் இருவர்க்கும் ஒன்றுபோல் திறமை யுண்டு. அறிவு, திரு, ஆற்றல்களில் தம்மினும் மிக்கார் ஒருவரும் வரலாகாதெனவும், பெரும்புகழ் தேடவேண்டு மெனவும் இருவரும்எண்ணினர். அடுத்தோரை மேன்மைப் படுத்தல், தண்ணளி, மன்னுயிரைத் தன்னுயிர் போல் ஓம்பல் முதலிய நற்குணங்கள் உடையராய் விளங்கினர். அற்பத்தில் மகிழ்தலினும், பகைத்தலினும் யார் மிகுதி யென்று எடுத்துக் கூறவியலாது. இருவர் பிறப்பும் உலகிற்குத்துன்பம் விளைத்தது. ஊழின் வலியான் வருவதை யாரால் தடுக்கவியலும். † "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினும் தான் முந்துறும்". என்னும் அமுதமொழியுமுளது. கயிலைமலையை யெடுத்தாட்டிய இராவணன்; பத்துத்திசைகளையும் வென்ற தசமுகன்; பல்வேதங்களையும் பயின்ற முனிமகன்; கற்புடையன்னை சீதையைச் சிறைச்செய்து சீரழிந்தான். அங்ஙனம் பல்கேள்விமிக்கோன் பானுமதி கணவன்; சுத்தவீரன், சுதந்திரசீலன்; சுயோதனமன்னன் துணைவரோடழியக் காரணம், கற்புடைநங்கை திரௌபதித்தாயை பல்லார் முன்னிலையில் மானமழித்த மாணச்செயலாகும்.

வீரியமே சிறப்பாயிருந்த பௌராணிக காலத்தின் இறுதியில்தான் சுயோதனன் வாழ்ந்து வந்தனன்.

மன்னருக்கு அரிய குணம் வீரமே. வீரத்திற்குறி குறியாக வெற்றிமாலை சூடுதல் முதலிய தமிழ் நாட்டு வழக்கத்தை புறப்பொருள் நூல்களால் அறியலாம். துரியோதனன் அச்சிறந்த குணமே உருவாயுடையவன். சுற்றத்தார் மீது அக்குணம் பரவியது அவனது மூர்க்கத் தன்மை என்று கூறுதல் சாலாது. முதலில் தந்தை வளர்த்த முறையும், பின்னர் உயிர்த்துணையாய் வந்த நண்பர்களது உபதேசமொழிகளும் அவனை அவ்வண்ணம் புரியத் தூண்டிற்று. பிறந்த நாள் முதற்கொண்டு அன்புடன் சிறுவர்களைக் கண்டிப்பின்றி திருதராட்டிரன் விட்டமையால், பிள்ளைகள் தம் மனம் போல் நடந்து வந்தனர். துரியோதனன் அறிவு வந்த நாள் முதல் அரசாளத் தொடங்கினன். இதற்குமாறாகப் பாண்டவர்கள் அந்நாள் முதல் இதுகாறும் துன்புற்று வாழ்ந்தனர். அரசபதவி என்றும் அனுபவிக்கும் ஒருவனுக்கு அதைப் பிறர்க்களிக்க மனம் எழுமோ? "பாண்டுமைந்தனை அரசனாக்கி மகுடம் புனைந்தால், நம் நிலைமை என்னும். இதுகாறும் அடைந்து வந்த பெரும்போகம் இழக்க வேண்டுமே. அன்றியும், இளம்பருவத்தில் துன்புறுத்திய வீமன் முதலியோர் அரசாட்சிபெற்றால் எளிதில் விடுவார்களா?" இவ்வாறு பலவெண்ணித் துரியோதனன் அவர்களைப் பகைத்தான் என்க. கர்ணன், சகுனி முதலிய நண்பர் தீய உபதேசமாகிய நீரைப்பாய்ச்சினர். ஆகவே, பகை முளைத்துச் செழித்தோங்கியது. எம்மனிதனுக்கும் பிறக்கும்பொழுது எல்லாக் குழந்தைகளும் பெரும்பான்மையாய் ஒன்றுபோல்தான் காணப்படுவார்கள். "பிள்ளைமனம் வெள்ளைத்தாள்போல்" அழுக்கற்றது. இது பெரியோர் கூற்று. பின்னர் ஏற்படும் பயிற்சி, சந்தர்ப்பம், கூட்டுறவு ஆகிய இம்மூன்றுமே ஒருமனிதனது நன்மை தீமைகளுக்கு வித்தாயிருக்கின்றன. துரியோதனன்

பாண்டவர்களுடன் பகை கொள்வதற்கும், அவர்களை அழிக்கும் பொருட்டு விடாமுயற்சி செய்வதற்கும் தூண்டிய வேதுக்கள் துன்மந்திரிகளின் உபதேசமும், தன் மானத்தைக் காப்பாற்றுவதிலுள்ள ஆசையும் என்று எளிதில் அறியலாம்.

"முள்ளாயினும் முறுகப்பிடி" என்னும் அமுத மொழிப்படித் துரியோதனன் ஒழுகலானான். பீஷ்மர் துரோணர் முதலிய ஆசிரியத் தலைவர்களும், தந்தை தாயரும், மக்களுக்கியலா ஆற்றல்மிக்க கண்ணபிரானும் இது தகாதெனக்கூறியும் தான் கொண்ட கொள்கையைச் சரிவர நிறைவேற்றத்துணிந்த துரியோதனனது திட்ப மான மனநிலையை யார்தான் புகழமாட்டார்கள்? இத் திட்பபுத்தி எச்செயலிலும் மாறாதிருந்தது. தன்னை யடைந்தவர்களது துன்பத்தைத் தன் இன்னுயிர் நீத்தாயினும் காப்பாற்றத்தலைப்பட்ட துரியோதனனை ஒத்தார் இவ்வுலகில் மிகவும் அருமை. அவ்வண்ணமே, மாற்றுரை ஒறுப்பதிலும் மிக்க ஆற்றல் உடையவனு யிருந்தான். பாண்டவருபாய் முளைத்த பகை முற்றிச் சுயோதனனுக்குப் பித்தேறியது போல் தோற்றிற்று. ஆகையால், நேரான வழிகளினின்றும் விலகித் தீய நெறிகளில் அவன்புத்தி செல்லா நின்றது. அன்றேல், நேரிற்சென்றெதிர்க்காது திருட்டுச் சூதாடத் தலைப்பட மாட்டான். சகுனிமுதலாயினோர் கூறும் சூழ்ச்சிகள் செவியிலேறுவதற்கும் இதுவே காரணமாகும். சூதாடு வோர் பலகால்தோற்றாலும் மறுமுறை வெற்றிகிடைக்கும் என்றெண்ணுவதுபோல், இவர்கள் சொல்லை நம்பித் தோல்வியுற்றாலும் மீளவும் அன்னார் மொழிக்கு உடன் பட்டான்.

தீயாரிணக்கம் தீமைவிளைக்கும். நல்லிணக்கம் நன்மை பயக்கும்.

"நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூ உமில்".
தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாம் தலை".

என்பது தமிழ் மறை. நல்லோர் இணக்கத்தால் சீவன் முத்தி வரையிலும் பெறலாம் என்னும் வடநூற் கருத்தை யுணர்க.

"ஸதஸங்கத்வே நித்ஸங்கத்வம்
நித்ஸங்கத்வே நிர்மோகத்வம்
நிர்மோகத்வே நிஸ்சலதத்வம்
நிஸ்சலதத்வே ஜீவன்முக்தி:".

கர்ணன் கூட்டுறவு பெருங்கேடென்று எவராலும் நாட்டவியலாது. அவனிடம் அரிய குணங்கள் மிளிர்கின்றன. கைம்மாறு கருதாமல் பிறர்க்குதவும் பெரியான். உடல் பொருளாவி மூன்றையும் உவந்தளிக்கும் கேலோன். உயிர்போகும் வேளையிலும் புண்ணிய மனைத்தும் மறையவனுக்களித்த வள்ளல். சுயோதனனது அன்பிற்குரிய சகுனி முதலியோரைப்போல் இவனை எண்ணற்க. அங்கர் கோனை ஆருயிர் நண்பனைக் கொண்டானென்று பாரத நூல் நம்மை அறிவிக்கின்றது. ஓர் நாள் அரண்மனையில் மன்னன் மனைவி பானுமதியும், பானுமகனும் சூதாடிக் கொண்டிருந்தனர். அப்பொழுது துரியோதனன் தொலையில் வருவதைக் கண்ணுற்றுப் பானுமதி எழுந்தனள். மன்னன் வருவதையறியாது விளையாட்டு முழுதும்

முடியுமுன் செல்லலாகாதென்று அவளது துகிலைப் பற்றியிழுக்கவே, மேகலையற்று மணிகள் உதிர்ந்தன. அதனால், கர்ணனுக்குப் பெரிதும் வருத்தம் ஏற்பட்டது. துரியோதனன், கதிரவன் மைந்தன் வருந்தாவாறு அம் மணிகளை எடுக்கவேண்டுமோ அல்லது, கோக்க வேண்டுமோ வென்றனன். இது கதைத் தலைவன் பெருமைக்குச் சான்றாம்.

சுயோதனன் சகோதர அன்பைப்பற்றி ஆராய்வோம். செல்வம் நிறைந்த ஓர் வீட்டில் ஓர் தந்தைக்கு நான்கு ஆண் மக்களும், அவர்கள் ஒவ்வொருவருக்கும் மனைவி மக்களும் உளரென்று வைத்துக் கொள்வோம். சில வாண்டுகளில் சகோதரர் தங்களுக்குள் பகைத்தும், பெண்கள் ஒருவர்க்கொருவர் பொறாமைப்பட்டும், சொத்துக்களைப் பங்கிட்டும், ஓர் வீட்டையும் நாற்கூறு செய்தனர். தாயையும் தந்தையையும் புறக்கணித்தனர். பல்லிடங்களிலும் இவ்வாறு நிகழ்தல் கண்கூடு. நம்தாய் நாட்டில் பெரும்பாலும் வீடுகளிற் சகோதரச் சண்டைதான். நீதி மன்றங்களில் சொத்துரிமை பற்றிய வழக்குகள் பல. சிலவூர்களில் உடன் பிறந்தார்க்குள் பகை முற்றிக் கொலையும் நடைபெறும். ஆனால், துரியோதனனோடு வாழ்ந்த பெருங்கூட்டத்தினரான உடன் பிறந்தார்கள் ஒருவர்க்கொருவர் சண்டைசெய்யாமலும், மூத்தவனோடு பகைக்காமலும், தாய் தந்தையர் சொல்லிகழாமலும் வாழ்ந்துவந்தார்களன்றோ? நூறுமக்களது ஒற்றுமையான வாழ்வு, உலகில் இவர்கட்கு முன்னரும் பின்னரும் இருந்த தில்லை. துரியோதனன் குடும்பம்மட்டும் ஓர் கிராமம்

என்று சொல்லலாம். அவர்களுக்குள் பகைவராமற்காத்த மூத்தோன் பெருமை என்னே! என்னே! பீமனுடன் ஒண்டியாய்ப் போர்செய்யப் போகும்போது, பாண்டவர் துணைவரோடு நிற்பதை நோக்கித் தம்துணைவர் இறந்து பட்டதையுன்னி வருந்துகின்றான்.

* "எம்பியரு மெங்கிளையு மிறக்க விருந்தன மென்றே
வெம்பி மனமிகத்தளர்ந்தான் விதிதனக்கு விதி போல்வான்".
(பாரதம்)

சிறிய தந்தை மக்களிடமும் அன்பு காட்டவேண்டுவது முறைதான். என்செய்யலாம். முதலிலேயே பகை யேற்பட்டு விட்டது. சுற்றந்தழுவினால் நலனுறலாம். காகங்கள் கூடச்சுற்றம் தழுவுகின்றன. மக்களோ பகைக்கின்றனர்.

† "விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்".

‡ "அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று".

அரசர் அவசியம் சுற்றம் தழுவவேண்டுமென அறநூற்கள் முறையிடுகின்றன. நம் தலைவனுக்குப் பகைக்க நேர்ந்தது. ஷாஜஹான், அரங்கஸீப் ஆகிய அருங் குணங்கள் நிறைந்த முகலாயச் சக்கரவர்த்திகள் தன்னுடன் பிறந்தார்கட்கு எவ்வளவு தீமை புரிந்து நாட்டைப் பெற்றார்கள். அவர்களது இச்செயலை நாம் வெறுத்தாலும் ஏனைய நல்லியல்புகளைப் போற்றுகிறோம். அவ்வாறே, சுயோதனனையும் அளந்தறிந்து போற்றுக. உடன்பிறந்து பகைத்த வாலியையும், சுக்கிரீவனையும் புகழ்வதோடு,

இராவணனையும், வீடணனையும் மதிக்கிறோம். இரு தாய் மக்கள் பாண்டவர்களும், மூன்றுதாய் மக்கள் இராமபிரான் துணைவர்களும் ஒற்றுமையாய் வாழ்ந்தமைபோல் உலகில் எவரும் வாழவில்லை. "அன்னாய்! தம்பி பரதனுக்குரியநாடு எனக்குரியது போல்" என்று கைகேசியினிடம் இராகவன் கூறுவதுகாண்க.

"என் பின்னவன் பெற்ற செல்வம்
அடியனேன் பெற்ற தன்றோ". (கம்பராமாயணம்)

அண்ணனைக் காணாது சடைவிரி கோலமாய் நிற்கும் பரதன், காட்டிற்சென்று தனக்குரிய நாட்டை "யான் தங்களுக்குத்தருகின்றேன்; பெற்றுக்கொள்க" என வேண்டுகின்றனன். என்னே! இவர்கள் உடன்பிறப்பன்பு.

"முன்னர் வந்துதித் துலக மூன்றினு
நின்னை யொப்பிலா நீ பிறந்தபா
ரென்ன தாகில்யா னின்று தந்தனென்
மன்ன போந்துநீ மகுடஞ் சூடென்ற". (கம்பராமாயணம்)

இராமாயணத்தில் சகோதரவொற்றுமை மிகச்சிறப்பாயிருப்பது அரவக்கொடியோனுக்குத் தெரியாததன்று. எனினும், அவனூழ் சுற்றத்தார் பகையை எழுப்பியது. பகைக்கநேர்ந்த சுற்றத்தான்யாரெனில், அறக்கடவுள்; சாந்தமூர்த்தி; தருமதனயன். ஒளியின்முன் இருள் அகல்வதுபோல், அறத்தின்முன் மறம்நிலையாது. துரியோதனன் பகைமையாற் செய்த பல செயல்களும் தருமன் முன்னழிந்தொழிந்தன.

கதைத் தலைவனுக்கு அன்னை தந்தையரிடத்து அளவிலா அன்புளது. உயிர் போகும் நேரத்திலும் சஞ்சய முனிவனிடம் "எந்தையைப் பேணிக்கொள்க; என்னிலைமை யவர்க்குரைக்க" என்றமையால் தெளிக.

விதுரனைப் பகைத்தது மாற்றார்க்கு வெற்றியாயிற்று. உலகில் மதியுடையமைச்சர்களில் தலைசிறந்தவன் விதுரன். இறையன்பும் அவனுக்குளது. விற்போர் வன்மையை எவரும் புகழ்வர். நற்புத்தி கற்பித்தும் மன்னவன் கேளாததால் வில்லொடித்தானென்க. எழுத்தச்சன் பாரதநூலில் விதுரன் உபதேச மொழிகள் ஏசுபெருமான் மலைப்பிரசங்கம் போல் மாட்சிமையுடையன.

மக்களுக்குக் கேடு, காமம், கோபம் முதலிய அறுவகைத் தீக்குணங்கள். இத்தீக்குணங்களில் ஒன்றேனும் சிறிது மில்லாரைக் காண்பதரிது. இவையில் உலோப குணமும ஒன்று. இவறலும், மாண்பிறந்த மானமும் அரசர்க்காகாவென்பர். அதிகாமத்தால் இராவணனும், மிகுதானத்தால் மாவலியும், பெரும் உலோபத்தால் துரியோதனனும் மாண்டார்களென்ப. "ஊசிகுத்துமிடமும் கொடேன்" என்றது உலோப குணத்தாலும், பகைமையாலும் அன்றோ?

† "பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று".

"இவறலும் மாண்பிறந்த மானமு மாணா
வுவகையு மேத மிறைக்கு".

(திருக்குறள்)

போர் முடிவில் மாயனோடு கடிந்துரைக்குமிடத்தி லும் நாட்டாசை யவனைவிடவில்லை. கண்ணா! நாட்டை யவர்க்களிப்பாய் என்பதாலறிக.

"நிலத்தின் வாழ்வவர் பெறக் கொடாய்
இனி நினைத்த காரியமுடித்தியே"

(பாரதம்)

பூமியினதிர்ச்சியாலும், மழையின் மிகுதியாலும், ஆழியின் எழுச்சியாலும் சிலவேளைகளிற் பல்லாயிரம் உயிர்கள் அழிவுறல் துன்பமாய்த் தோற்றினும், உலக நிலைமைக்கு அவைகளும் இன்றியமையாதன. மாசுற்ற விடங்களை நீரால் தூய்மை செய்யாவிடில், சிற்றுயிர்கள் தோன்றி ஆங்கு இருப்பவர்களையும், அவர்களது பண்டங்க ளையும் அழித்துவிடும். அவ்வாறு மக்களியற்கையிலுண் டாகும் மாசு நீக்கிப் புத்துயிர் நல்க அடிக்கடி தோன்றும் வீரர்களுள் துரியோதனனும் ஒருவன். மாபாரதப்போர் நடைபெற்ற ஏதுவால் கொடிய மன்னரையும், தீய ஒழுக்கத்தாரையும் கொன்று ஆசுநீக்கி ஆரியாவிருத்தம் புண்ணிய பூமியாயிற்று. துரியோதனன் இல்லா திருந்தால் பாரதப்போர் நடைபெறுமோ? பின்னர் பாண்டவர் உலகைச் செம்மையாய் ஆளுதற்கும், துரி யோதனனே காரணம். இளமை முதல் துன்புற்று உழல்வோர்க்குத் தருமசிந்தையும், பிறர் துயரமும் நன்கு புலப்படும். இவன் பாண்டவருக்குப் புரிந்த துன்பமும் மிக்க உதவியாயிற்று.

அரசியல் முறையில் துரியோதனனுக்கு வல்லமை யுளதோவென்று ஐயுறவேண்டாம். நாட்டில் வாழும்

மக்கள் அனைவரையும் தன்வயப்படுத்தியதோடு உள்ளில் பாண்டவர் சார்பான மாரதர்களும் சுயோதனன் ஆணைக்கு அடங்கி நடந்ததால், அவனது ஆளுந்திறமை நல்லோரால் நன்கு மதிக்கற்பாலது. தன் தம்பியரை அன்புடன் தழுவியதும், தன்னாணைக்குள்ளாக்கியதும், நுண்ணறிவில்லாத் தந்தையை விதுரன் முதலியோர் வலையிற் சிக்காது பாதுகாத்துக் கொண்டதும் அவன் நயத்திறனையன்றி மற்றென்னை?

துரியோதனனது உருவம் அவனது உணர்ச்சிக்கு ஒத்ததாக விருந்தது. நெடிய உடலும், திரண்ட தோள் வலியும், அஞ்சத்தகும் தோற்றமும் உடையவன். சாத்விகத்தன்மை அவனுக்குச் சற்றேனும் இல்லை. வணங்காமுடி மன்னன் என இன்றும் கூறுவதே அவன் பெருமைக்குச் சான்றாம். அவனுக்குப் பல பதவிகளும், பட்டங்களும் இருந்தன. ஆகவே, துரியோதனன் வீரமே உருவாயமையப் பெற்றவனென்றால் சாலப் பொருந்த முடைத்து. இவன் கலியின் அவதாரமென்றும், பாண்டவர் தேவரின் பிறவி என்றும் சொல்வர்.

சுயோதனன் ஒரு சான்றோனாயிருந்தனனோ என்னும் வினாவிற்கு விடைபகர வேண்டுமேல், மேன்மையின் இலக்கணம் இன்னதென வரையறுத்துரைக்க வேண்டும். உடலின் வன்மையிலும், வீரம் பொருந்திய முயற்சியிலும், ஊக்கமுறும் உள்ளத்திலும் தான் மேன்மை என்றால், துரியோதனன் ஓர் பெருமகனாவான். அன்றேல், அரசாட்சியின் வல்லமையிலாவது, ஏனைய நாட்டை

வென்றடக்குவதிலாவது, பகைவரை யழிப்பதிலாவது, சரணடைந்தவரைக் காப்பாற்றுவதிலாவது பெருமை கூறுவதாயிருந்தால், துரியோதனன் இவற்றிலுந்தாழ்ந்தவனுகான். பொறுமை, தன்வயப்படுத்தல், விருந்தோம்பல், உண்மை நட்பு முதலிய நற்குணங்களுக்கு விளைநிலமாயிருந்தனன். ஒருவனது பெருமை அவனது இறுதிக் காலத்தில் வெளியாகும். உயிர் நீங்கும் காலையில் முன்செய்த குற்றங்களைக்கூறிய கண்ணனிடத்தில் துரியோதனன் நவின்ற மறுமொழி மெச்சத் தக்கதன்றோ? இங்ஙனம் உயிர் நீத்த பெருமகன் வீரனல்லனோ?

† "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்"

(திருக்குறள்)

* "ஏழுபெ ருங்கடன் மாநிலமெங்கு [illegible]றமே
சூழ்க வண்டமிழ்மாங்க தேங்குக்சுருதி
வீழ்க பைம்புயல் விளங்குக வளங்கெழுமனு நூல்
வாழ்க வன்புடையடியவர் மன்னுமாதவமே"

(பாரதம்)

முற்றுப் பெற்றது.



# பிழை திருத்தம்.

| பக்கம் | பத்தி | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- | --- |
| 6 | ,, | 26 | காப்பியமாக | காப்பியமாகத் |
| 12 | ,, | 5 | போகும், | போகும். |
| 17 | ,, | 23 | கூறவே | கூரவே |
| 20 | ,, | 15 | யிருந்தாலும் | யிருந்ததாலும் |
| 21 | ,, | 9 | சற்றுத | சற்றுந் |
| 23 | ,, | 13 | பாண்டுவி | பாண்டுவின் |
| 24 | ,, | 2 | கழுகிவிட்டு | கழுவிவிட்டு |
| ஷெ | ,, | 11 | வீரர்களை | வீரர்களைக் |
| 25 | 2 | 13 | முடையதாக்கி | முடையதாக்கிக் |
| 36 | ,, | 1 | பற்றி | பற்றிச் |
| ஷெ | ,, | 1 | சற்று | சற்றுச் |
| 42 | ,, | 8 | வருவதாக | வருவதாகத் |
| 43 | ,, | 9 | படி | படிக் |
| 45 | ,, | 5 | மதகாவித: | மதகர்வித: |
| ஷெ | ,, | 6 | யகற்ற | யகறறக் |
| 46 | ,, | 25 | அருர்சனனுககு | அருச்சுனனுக்கு |
| 47 | ,, | 3 | இருப்பினும் | இருப்பினும் |
| 48 | ,, | 21 | சற்று | சறறுக் |
| 49 | ,, | 4 | கூட்டத்தைத் | கூட்டத்தைக் |
| 51 | ,, | 11 | அதினல் | அதனல் |
| 52 | ,, | 2 | அபிமன்னனுக்கு | அபிமன்னனுக்குத் |
| ஷெ | ,, | 9 | தெரிவித்தான் | தெரிவித்தான். |
| ஷெ | 3 | 2 | யனுப்பி | யனுப்பிக் |
| 56 | ,, | 16 | கூறினீர்; | கூறினீர்? |
| 57 | ,, | 20 | புரிவது | புரிவது |

| பக்கம் | பத்தி | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 58 | ,, | 25 | யாகும்! | யாகும்" |
| 62 | ,, | 16 | நூற்றுவர் | பாண்டவர் |
| 65 | ,, | 16 | நிறைவேறுது. | நிறைவேறு. |
| ௸ | ,, | 19 | எனத், | எனத் |
| 67 | 2 | 2 | கைவாள் | கைவாளி |
| 70 | ,, | 20 | வடநூலார் | மலையாள நூலார் |
| 74 | ,, | 4 | அமைத்தது | அமைத்தமை |
| 75 | ,, | 4 | குணம | குணம் |
| ௸ | 2 | 3 | ஆண்டு | ஆண்டுக் |
| 76 | 2 | 5 | சிறபபுறும் | சிறப்புறும் |
| 81 | ,, | 23 | நோகுவீராக. | நோக்குவீராக. |
| 83 | 3 | 8 | கோட்டைகள் | கோட்டை |
| 99 | ,, | 2 | மராறுண்டு | மாறுண்டு |
| 101 | 3 | 1 | படையின்றி | படைதொட்டு |
| 103 | ,, | 6 | எப்பொருட்டும் | எப்பொருட்கும் |
| ௸ | ,, | 10 | பெற்றிருக்கும | பெற்றிருக்கும் |
| 104 | ,, | 1 | பிணங்கி | பிணங்கிய |
| 113 | ,, | 17 | எனறும். | என்றும்? |
| முன்னுரை | | | | |
| 1 | ,, | 17 | எந்நன்றி | என்னன்றி |

---

குறிப்பு † இந்நூலில் இவ்வடையாளம் திருக்குறள் மேற்கோளைக் காட்டும்.

* இது வில்லிபாரத மேற்கோள்.